14th November 1961

The amendment was put and carried.

Clause 1 as amended was put and carried.

The Preamble was put and carried.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

'That the Madras General Sales Tax (Third Amendment) Bill, 1961 (L.A. Bill No. 26 of 1961) as amended be passed.'

DEPUTY SPEAKER : The question is—

'That the Madras General Sales Tax (Third Amendment) Bill, 1961 (L.A. Bill No. 26 of 1961) as amended be passed.'

The motion was put and carried and the Bill as amended was passed.

II—ANNOUNCEMENTS—*cont.*

(2) THE MADRAS CITY MUNICIPAL (AMENDMENT) BILL, 1961.

DEPUTY SPEAKER : I have to announce to the House that the Governor has given his recommendation for the consideration in the Legislative Assembly of the Madras City Municipal (Amendment) Bill, 1961.

III—GOVERNMENT BILLS—*cont.*

(2) THE MADRAS CITY MUNICIPAL (AMENDMENT) BILL, 1961.
(L.A. BILL NO. 35 OF 1961).

* THE HON. SRIMATHI LOURDAMMAL SIMON : Mr. Deputy Speaker, Sir, I beg to move—

'That the Madras City Municipal (Amendment) Bill, 1961 (L.A. Bill No. 35 of 1961) be taken into consideration.'

It is proposed to amend certain provisions of the Madras City Municipal Act, 1919 (Madras Act IV of 1919).

The White Paper on the Reform of Local Administration in Madras State included also proposals for the reform of the Madras City Municipal Administration. The changes contemplated in the White Paper in regard to the Corporation of Madras can be classified into three heads, namely :—

(i) Reform of the composition of the Council and the Council constituencies;

(ii) Reorganization of Standing Committees and resettlement of their functions; and

(iii) Reform of the system of appointment to key posts in the services of the Corporation.

A Legislature Committee consisting of hon. Members of both Houses of the Legislature was constituted to advise the Minister for Local Administration in finalizing the White Paper proposals and in pursuance of the decisions taken by the Legislature Committee regarding the reform of the composition of the Council and

[Srimathi Lourdammal Simon] [14th November 1961

the Council constituencies, the Madras City Municipal (Amendment) Act, 1958, was enacted. It is now proposed to give effect to the decisions of the Legislature Committee regarding the other recommendations.

The important changes proposed to be provided for are—

(i) Division of the Madras City into two parts called North Madras and South Madras;

(ii) Constitution of Central Committee and Circle Committee on a territorial basis in the place of the existing five functional standing committees, besides continuing the existing Accounts Committee (renamed as the Corporation Accounts Committee) and consisting a Contracts Committee to dispose of tenders for works and a licence appeals committee to deal with appeals against orders passed under the licensing provisions, etc.

(iii) Appointment of two Assistant Commissioners, one to be in charge of North Madras and the other to be in charge of South Madras, subject to the general superintendence, direction and control of the Commissioner.

(iv) Appointment of a Personal Assistant to the Commissioner to assist the Commissioner in the performance of his duties.

(v) Reorganization of the establishments under the Corporation by classifying the officers into four classes.

In order to carry out the above proposals, it is necessary to amend certain sections of the Madras City Municipal Act, 1919 (Madras Act IV of 1919). The Bill seeks to achieve the above objects.

DEPUTY SPEAKER : Motion moved—

'That the Madras City Municipal (Amendment) Bill, 1961 (L.A. Bill No. 35 of 1961) be taken into consideration.

Sri S. M. ANNAMALAI : Sir, I move the following amendment :—

'That the Madras City Municipal (Amendment) Bill, 1961 (L.A. Bill No. 35 of 1961) be referred to a Select Committee consisting of .... Members of the Assembly (list of names to be furnished later).'

The amendment was duly seconded.

DEPUTY SPEAKER : The motion and the amendment are before the House for discussion.

**Sri S. M. ANNAMALAI :** சட்டமன்றத் துணைத் தலைவர் அவர்களே, இது ஒரு முக்கியமான மசோதா. அமைச்சர் அவர்கள் பேசும்பொழுது, இது சம்பந்தப்பட்ட வெள்ளை அறிக்கையின்மீது விவாதம் நடந்தபொழுது ஒரு சட்டசபையை கமிட்டி நியமித்து அந்தக் கமிட்டி உறுப்பினர்களால் கொடுக்கப்பட்ட

14th November 1961] [Sri S. M. Annamalai]

சில முடிவுகளை இப்பொழுது இந்த சபை முன்னர், தமிழ் நாட்டின் தலைநகரான சென்னை நகரைப் பொறுத்தவரையில் ஒரு மசோதா வாக, கொண்டுவந்திருப்பதாகச் சொன்னார்கள். வெள்ளை அறிக்கை 1958-ல் விவாதிக்கப்பட்டு, அப்பொழுதே ஒரு முடிவு எடுக்கப்பட்டது. இப்பொழுது ஏறத்தாழ மூன்று ஆண்டுகள் ஆகின்றன. மூன்று ஆண்டுகள் கழித்து, நாம் இந்தச் சபையி லிருந்து வெளியேறக்கூடிய நிலையில், அவசரம் அவசரமாக, 102 பிரிவுகளைக் கொண்டுள்ள இந்த மசோதா கொண்டுவரப்பட் டுள்ளது. மூல ஆக்டையும், இந்த மசோதாவையும் வைத்துப் பார்ப்போமேயானால், இதைப் புரிந்துகொள்வது மிகவும் கஷ்ட மாக இருக்கிறது. இந்த மசோதாவினால் மக்களுக்கு என்ன நன்மை ஏற்படும், இந்த மசோதாவின் நோக்கம் என்ன என்ப தைப் புரிந்துகொள்ள முடியாமல் இருக்கிறபொழுது, அவசரம் அவசரமாக, மூன்று ஆண்டுகள் கழித்து, ஸெலக்ட் கமிட்டிக்கு விடாமலேயே, இந்த மசோதாவை நிறைவேற்றப் பார்க்கிறார்கள். அதே சமயத்தில் வேறு மூன்று மசோதாக்களை நமது ரெவென்யூ அமைச்சர் அவர்கள் பொறுக்குக் கமிட்டிக்கு விடுகி றார்கள். நான் ஏற்கெனவே குறிப்பிட்டதுபோல், இது ஒரு முக்கியமான மசோதா, ஒரு பெரிய மசோதாவும்கூட. எனக்குத் தெரிந்த வரையில், இவ்வளவு பிரிவுகளைக் கொண்ட ஒரு மசோதா செலக்ட் கமிட்டிக்குச் செல்லாமல் சட்டமாக்கப்படுவதை நான் சென்ற ஐந்தாண்டுகளிலே பார்த்தது கிடையாது. இவ்வளவு அவசரமாக இந்த மசோதாவைக் கொண்டுவந்து சட்டமாக்க வேண்டுமென்று சொல்லும்பொழுது, அதிலே என்ன அவ்வளவு அவசரம் இருக்கிறது என்பதை என்னால் புரிந்துகொள்ள முடிய வில்லை. பஞ்சாயத்துச் சட்டத்தில்—1958-ம் ஆண்டு நிறை வேற்றப்பட்ட சட்டத்தில், பல கோளாறுகள் இன்றைக்கும் இருந்து கொண்டிருக்கின்றன. அப்போது அந்தச் சட்டத்தை அவசர அவசரமாக நிறைவேற்றினோம். இதில் பல சிக்கல்கள் இருக்கின்றன என்று அப்போதே நாங்கள் சொன்னோம். 'ஸ்லோ அண்ட் ஸ்டெடி வின்ஸ் தி ரேஸ்' என்பதுபோல, அதை நன்றாக ஆற அமர ஆராய்ந்து சட்டமாக்க வேண்டுமென்று நாங்கள் சொன் னோம். ஆனால், இதை அவசரமாக நிறைவேற்ற வேண்டும் என்ற முறையில், சட்ட மன்றத்தின் முன்னால் இதைக் கொண்டுவந்து நிறைவேற்றிவிட்டார்கள். இன்னும் விதிகள் பிறப்பிக்கப்படா மல் பல கஷ்டங்கள் இருக்கின்றன. அப்படியிருக்க இப்பொழுது இந்த மசோதாவைச் சட்ட மன்றத்தின் முன்னால் கொண்டுவந்தி ருக்கிறார்கள். தலை நகரத்தைப் பொறுத்த சட்டமாக இது இருப் பதால், இதை ஏன் பொறுக்குக் குழுவின் பரிசிலனைக்கு விடக் கூடாது என்று அமைச்சர் அவர்களைத் தங்கள் மூலமாகக் கேட்கிறேன்.

வடக்கு, தெற்கு என்று பிரிக்கப்பட்டிருக்கிறது. அதைப் போல இப்பொழுதிருக்கும் கமிஷனரோடு, அவருக்குக் கீழே பல உதவியாளர்களைப் போடும் வகையில் இதை மாற்றியமைக் கிறோம். இப்படி நிர்வாகத்தை மாற்றியமைக்கும்போது, தலை

[Sri S. M. Annamalai] [14th November 1961

நகரத்திலுள்ள பெருமக்களை அழைத்து அவர்களுடைய அபிப்பிராயங்களைக் கேட்டு, இதிலுள்ள குறைபாடுகளைப் போக்கிக் கொள்ள வேண்டும். மாநகராட்சி மன்ற மேயர், கவுன்சிலர்கள், கமிஷனர் இவர்களையும் பொறுக்குக் குழுவின் முன்னால் அழைத்து அவர்களுடைய அபிப்பிராயங்களையும் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம். இப்படிச் செய்தால், இந்த மசோதாவில் உள்ள சில சிக்கல்களைத் தீர்க்கலாம். அரசாங்கம் கமிஷனருடைய அபிப்பிராயங்களை ஒரு வேளை கேட்டிருப்பார்கள். ஆனால், மேயர், கவுன்சிலர்கள் இவர்களையும் கலந்தாலோசித்தார்களா என்று தெரியாது. இதை அவசரமாகக் கொண்டுவந்து நிறைவேற்றுவதற்குப் பதிலாக பொறுக்குக் குழுவை அமைத்து, வருகிற டிசம்பர் மாதத்திற்குள் அதனுடைய பரிசீலனையை முடித்து, அதன்பிறகு இந்த மசோதாவை டிசம்பர் மாதத்தில் சட்ட மன்றத்தின் முன்னால் கொண்டுவருவது நலமாக இருக்கும்.

இந்த மசோதாவில் கமிஷனருக்கு அதிகமான அதிகாரங்கள் தரப்படுகின்றன. லைசென்சை ரத்து செய்வதற்கும், புதிதாக லைசென்ஸ் கொடுப்பதற்கும் கமிஷனருக்கு அதிகாரம் வழங்கப்படுகிறது. எஸ்டிமேட் சாங்ஷன் செய்வதற்குங்கூட, முன்பு இருந்த அதிகாரத்தைவிட இப்பொழுது அதிகமான அதிகாரங்கள் கமிஷனருக்குத் தரப்படுகின்றன. சென்ட்ரல் கமிட்டி, சர்க்கிள் கமிட்டி போன்றவைகளை அமைக்கும் போது, அவைகளுக்கு வேண்டுமானால் இந்த அதிகாரங்களைத் தரலாமேயொழிய, கமிஷனருக்கு அதிக அதிகாரம் கொடுக்க வேண்டிய அவசியமில்லை. புதிய வீடு கட்ட, புதிய தெரு அமைக்க இப்படிப்பட்ட காரியங்களுக்கு அனுமதி வழங்குவதில் ஸ்டாண்டிங் கமிட்டிக்குச் சென்று, அவர்களுடைய அபிப்பிராயங்களைப் பெற்றுத்தான் செய்யவேண்டும் என்று முன்பு இருந்தது. இப்பொழுது இந்த மசோதாவில், சென்ட்ரல் கமிட்டிக்கோ, சர்க்கிள் கமிட்டிக்கோ செல்லவேண்டிய அவசியம் இல்லை. கமிஷனர் அதற்கு உண்டான அனுமதியைக் கொடுக்கலாம் என்று இருக்கிறது. இப்படிப் பல அதிகாரங்கள் கார்ப்பரேஷன் கமிஷனருக்குத் தரப்படுகின்றன. இதையெல்லாம் பரிசீலனை செய்வது அவசியம். சர்க்காருக்கு அதிகமான அதிகாரம் வேண்டும் என்பதற்காக கார்ப்பரேஷனுடைய அதிகாரத்தை இப்படி மறைமுகமாகப் பறிப்பதாக இந்த மசோதா இருக்கிறது. இந்த மசோதாவை பொறுக்குக் குழுவின் பரிசீலனைக்கு விட்டு பல திருத்தங்கள் இதில் செய்ய வேண்டியிருக்கிறது.

ஒன்றே ஒன்று சொல்கிறேன். சென்னை நகரக் கார்ப்பரேஷன் கொடுக்கும் விளம்பரங்கள் இதற்கு முன்பு இந்தி, தெலுங்கு போன்ற மொழிகளில்கூட கொடுக்கலாம் என்ற நிலைமை இருந்தது. அந்த உரிமை இதில் நீக்கப்பட்டிருக்கிறது. எல்லாக் கடிதப் போக்குவரத்தும், விளம்பரங்கள் போன்றவைகளும், தாய் மொழியிலோ, தமிழிலோ, ஆங்கிலத்திலோ இருக்க வேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. இது ஒன்றுதான் வரவேற்கத்தக்கதாக

இருக்கிறது. மற்றவைகளில் திருத்தங்கள் தேவைப்படும். ஆகவே, பொறுக்குக்குழுவுக்கு விட்டு, நகரத்திலுள்ள சில பெரிய மனிதர்களையும், நகராட்சி மன்ற நிர்வாகத்திலே பழக்கப் பட்டவர்களையும் வரவழைத்து, மேயர், கவுன்சிலர்களையும் வரவழைத்து, அவர்களுடைய கருத்துக்களைக் கேட்டு, அதன்படி மசோதாவில் தேவையான திருத்தங்களைச் செய்து, அடுத்த டிசம்பரில் இந்தச் சட்ட மன்றத்தின் முன்னால் கொண்டுவந்து இந்த மசோதாவைச் சட்டமாக்கலாம் என்று சொல்லிக் கொள்கிறேன். பொறுக்குக் குழுவுக்கு இந்த மசோதாவை விடவேண்டுமென்ற என்னுடைய யோசனையை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக் கொள்கிறேன்.

* **Sri K. ANBAZHAGAN** : சட்டமன்றத் தலைவர் அவர்களே, சென்னை மாநகராட்சி மன்ற நிர்வாக முறையைச் சீர்திருத்துவதற்கான வகையில் இன்றையதினம் இங்கே கொண்டுவரப்பட்டிருக்கிற இந்தத் திருத்த மசோதா பொதுவகையிலே வரவேற்கத் தக்கது என்றாலும் மேலும் ஆலோசிக்கப்பட வேண்டும் என்ற கருத்தை நான் அமைச்சர் அவர்களுக்குத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். இன்றே ஆலோசிக்கப்படுவதற்கு இந்தச் சட்ட மன்றத்தினுடைய இன்றைய சூழ்நிலை அவ்வளவு ஏற்றதா என்பதைப்பற்றி நான் சிறிது கவலைப்படுகிறேன்.

ஏனென்றால், இங்குள்ளவர்கள், அமைச்சர்கள் உட்பட, வேறு பல பிரச்னைகளில் கவனத்தைச் செலுத்துகிற சூழ்நிலையில் இந்த மசோதாவில் உள்ள பல பகுதிகளில் தீவிர கவனம் செலுத்துவது சிறிது கடினம். அத்தகைய சூழ்நிலையில், நண்பர் திரு. அண்ணாமலை அவர்கள் இங்கே எடுத்துச் சொன்னதுபோல், ஒன்று இதை ஒரு பொறுக்குக் குழுவுக்கு விடுவதன் மூலமாக ஒரு முழு அளவு பரிசிலனை செய்யலாம். அல்லது, எல்லாவற்றையும் நாங்கள் சிறப்பாகக் கவனித்துவிட்டோம் என்ற நம்பிக்கையோடு அமைச்சர் அவர்கள் இதை நேரடியாகச் சட்ட மன்றத்திலே நிறைவேற்ற வேண்டுமென்று கருதுவாரானால் மன்றத்து உறுப்பினர்களைக் கொண்டு முன்னால் பஞ்சாயத்துச் சட்டம் சம்பந்தமாகக் குழு அமைத்து அதைப் பரிசீலனை செய்ததுபோல, இந்த மசோதாவைப் பொறுத்தும், இதிலே அதிக ஆர்வம் உடையவர்களையெல்லாம் கூட்டி ஓரிரு நாட்கள் மாலை நேரத்திலாவது அதற்காக நேரம் ஒதுக்கி இதைப் பரிசிலனை செய்யலாம். அந்த வகையிலே ஒவ்வொரு பிரிவாகப் பரிசிலனை செய்ய கனம் அமைச்சர் அவர்கள் முன்வர வேண்டும்.

இந்தச் சட்டம் மிக விரிவான சட்டமாக இருப்பதால், இதில் அதிகத் திருத்தங்கள் தேவைப்படலாம். இதிலேயுள்ள ஒவ்வொரு பிரச்சினையையும் தனித்தனியாகப் பிரித்துப் பார்த்து கருத்துக்கள் எடுத்துச் சொல்வதற்கும் சட்டமன்றத்தினர் அனைவருக்கும் வாய்ப்பு இல்லை. அத்தனை பேரும் இதிலே ஆர்வம் செலுத்த முடியவில்லை. மிக இன்றியமையாத சட்டம் என்ற காரணங்

[Sri K. Anbazhagan] [14th November 1961

காட்டி உடனடியாகச் சட்ட மன்றத்திலே எப்படியாவது நிறைவேற்றி விடவேண்டும் என்ற முறையைக் கையாளாமல் இதில் எத்தனையோ குறைகள் ஏற்பட்டுவிடலாம் என்பதை உணர்ந்து அவைகளைத் திருத்துவதற்கு வாய்ப்பளிக்க முயற்சிக்க வேண்டும். அதற்கு இன்று கூட இந்த மசோதாவைக் குழுவின் பரிசிலனைக்கு விடலாம்.

தேர்தல் சூழ்நிலையில் இந்தச் சட்டம் வருகிறது. மேலும் இந்தச் சட்டம் வந்தவுடனே நமக்கு அதனாலே உடனடிப் பலன் எதுவும் இல்லை. அடுத்த நகராட்சி மன்றத் தேர்தலுக்குப் பின்னாலேதான் இந்தச் சட்டத்தின் பலனை மாநகராட்சி மன்றம் அடைந்தாக வேண்டும். இதிலே இருக்கிற புதுமைகள் இப்பொழுது நிறைவேற்றப்படப் போவதில்லை. அடுத்த நவம்பர் வரையிலே மாநகராட்சி மன்றத் தேர்தல் ஒத்திவைக்கப்பட்டிருக்கிறது. எனவே, அடுத்த ஆண்டு நவம்பர் மாதத்திலே நடைபெறுகிற தேர்தலுக்குப் பின்னால் நடைமுறைக்கு வரவேண்டியதை புதிய சட்ட மன்றத்திலே கூட நிறைவேற்றிக் கொள்ளலாம். நிதி அமைச்சர் கனம் திரு. சுப்பிரமணியம் அவர்கள், தாம் இங்கு இருக்கிறபோதே இதை நிறைவேற்றவேண்டுமென்று விரும்புவாரானால், டிசம்பரிலே இரண்டொரு நாட்கள் ஒதுக்கி வைத்து நிறைவேற்றிவிடலாம். அல்லது இதற்காகத் தனியாக, சிறப்பாக கவனம் செலுத்தக்கூடிய முறையில் ஆலோசிப்பதற்கு வழிவகைகளைக் காண்பது அவசியம் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

இரண்டாவதாக, இந்தச் சட்டம் நகராட்சி மன்ற அமைப்பில் ஒரு பெரிய மாற்றத்தை உண்டாக்குகிற சட்டமாகும். ஏறத்தாழ 60, 70 உறுப்பினர்கள் இருந்த மன்றத்தில் 100 உறுப்பினர்கள் வந்துள்ள நிலையில் அதற்கேற்ப நிர்வாக மாற்றத்துக்கு இது வழி செய்கிறது. அதுபோல்தான், நிர்வாக முறையில் கமிஷனர் தான் இன்றைக்கு எல்லாப் பொறுப்புகளும் உடையவர் என்ற முறை இந்தாலுங் கூட, நகராட்சி மன்றத்துக்குக் கீழே பத்துத் தனிப்பட்ட வட்டக் குழுக்கள் பணியாற்றக்கூடிய நிலைமையிலே அந்த வட்டக் குழுக்களின் தீர்மானங்களை நிறைவேற்ற வேண்டிய நிலையிலே வேறு சில அதிகாரிகள் ஏற்பட வேண்டிய சூழ்நிலை ஏற்படுகிறது. குறிப்பாக மாநகராட்சி மன்ற ஆணையாளரின் கீழ் இரண்டு துணை ஆணையாளர்கள் அமர்த்தப்பட்டு, தென் சென்னையை ஒரு துணை ஆணையாளரும், வட சென்னையை மற்றொரு துணை ஆணையாளரும் கவனிக்க வேண்டும், அவருடைய மேற்பார்வையில் இருக்க வேண்டும் என்ற கருத்து தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

பத்து வட்டக் குழுக்கள் (சர்க்கிள் கமிட்டிகள்) அமைக்கப்படுகின்றன. அவை மூலமாக நிர்வாகம் நடத்தப்படுகிற நிலையில் ஒவ்வொரு வட்டக் குழுவுக்கும் ஒரு அதிகாரி அதன் மேற்பார்வையில் இருக்கும் சூழ்நிலையை உண்டாக்குவோமானால், அதுதான் செயலாற்ற சிறப்பே தவிர, ஐந்து வட்டக் குழுக்களை இணைத்து அதற்கு ஒரு துணை ஆணையாளர் என்ற முறையை ஏற்படுத்தும் போது ஒரு நிர்வாகத்தை வைத்து ஐந்து வட்டக் குழுக்களிலே

14th November 1961] [Sri K. Anbazhagan]

உள்ளவர்களோடு தொடர்பு கொள்வது சற்றுக் கடினமாக இருக்கும். கமிஷனருக்குக் கீழ் அடுத்த நிலையிலே இருக்கிற இரண்டு துணைக் கமிஷனர்களை நியமித்து அவர்களிடத்தில் தென் சென்னை, வட சென்னை என்ற இரண்டுபகுதிகளையும் ஒப்படைப் பதைவிட இன்னும் சற்று அடுத்த நிலையில் அதிகாரிகளை வைத்தா லும்கூட ஒவ்வொரு வட்டக் குழுவுக்கும் ஒரு அதிகாரியை நியமித்து அவர் மூலமாக அந்த வட்டத்தினுடைய நிர்வாகத்தை மேற்கொள்ளும் குழுக்கள், பணியாற்றுவதற்குத் தேவைப்படும். இவைகளை ஏற்படுத்துகிறபொழுது, நிச்சயமாக நிர்வாக இயந்தி ரத்தை ஒழுங்குபடுத்தாவிட்டால் ஒருவேளை இவ்வளவு சீர்திருத்த மும் வெறும் மேல் பூச்சாக நின்றுவிடக்கூடும். அந்த நிர்வாக இயந் திரத்தை ஒழுங்குபடுத்துகிறபொழுது ஒவ்வொரு வட்டமும் ஒரு துணை அதிகாரி பொறுப்பிலே ஒப்படைக்கப்பட வேண்டும். ஐந்து வட்டங்கள் சேர்த்து ஒரு துணையாணையாளர் பொறுப்பில் ஒப்ப டைக்கப்படுவதைவிட, தென் சென்னை, வட சென்னை என்று பிரிக் கப்படுகிறவகையிலே, தென் சென்னை ஒருவருடைய பொறுப்பிலும், வட சென்னை ஒருவருடைய பொறுப்பிலேயும் இருப்பதைவிட, ஒவ்வொரு வட்டக் குழுவுக்கும் நேரடியாக அட்மினிஸ்ரேடிவ் ஆபீஸர் என்ற முறையிலாவது ஒருவர் பொறுப்புடையவரா யிருந்தால் இந்தப் புதிய முறை செம்மையாக இயங்க முடியும் என்ற கருத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

கடைசியாக நான் தெரிவிக்க விரும்புவது, இந்த வட்டக் குழுக்கள் அமைப்பது மூலமாக கட்சி உணர்ச்சிகள் மிகைப் படாமல் இருக்கத்தக்க சூழ்நிலை இதனாலேயே தோன்றும் என்று எதிர்பார்க்கிறேன். கட்சி உணர்ச்சிகள் அரசியலுக்காக எவ்வளவு தேவைப்பட்டாலும், நகராட்சி மன்றச் செயல்முறையிலே தேவையில்லை என்பதை எந்த நல்ல ஜனநாயகவாதியும் ஏற்றுக் கொள்வார். அதிலேயும் மாநகராட்சி மன்ற நிர்வாகத்தைப் பொறுத்தவரையிலும் பெரும்பான்மைக் கட்சிக்கு இருக்க வேண்டிய இயல்பான உரிமைகளைச் சிறுபான்மைக் கட்சிகள் கொடுப்பதற்கு மறுக்கிற காரணத்தாலே ஒருவருக்கொருவர் குரோத உணர்ச்சி வளர இடம் ஏற்பட்டால், அதை நாடாளுகிற பெரும் கட்சியைச் சார்ந்தவர்கள் அந்த மாறுபட்ட உணர்ச்சி வளருவதைத் தடுப்பதற்கும், கட்சிகளிடையே ஒத்துழைப்பை நல்குவதற்கும்—தங்கள் கட்சி மாநில அரசில் பெரும்பான்மை யாக இருக்கிற காரணத்தால் நகராட்சியில் கட்சி முக்கியமல்ல என்று கருதி—நிர்வாக முறையில் ஒத்துழைப்பதற்கு முன்வரு வார்களேயானல் நிச்சயமாக இந்தப் புதிய சட்டத்தினலே அதிகப் பலன் ஏற்படும் என்று நான் நம்புகிறேன். அதிலும் வட்டக் குழுக்கள் ஏற்படுகிறபொழுது, கட்சி வேற்றுமை உணர்ச்சி குறைந்து, பொதுநலம் போற்றப்படுவதற்கு வழி ஏற்படுமென்று நிச்சயமாக எதிர்பார்க்கிறேன்.

கடைசியாக இந்தச் சட்டத்தை அமுலாக்குவது பற்றி குறிப் பிடுகிறபொழுது, எந்தத் தேதியிலிருந்து இது அமுலாக்கப்படு கிறதோ அதிலிருந்து இப்பொழுதுள்ள (ஸ்டாண்டிங்)

நிலைக் குழுக்கள் கலைக்கப்பட்டு, புதிதாகச் சொல்லப்பட்டிருக்கிற கணக்குக் குழு முதலான குழுக்கள் ஏற்படுத்தப்படவேண்டுமென்று இந்தச் சட்டத்திலே குறிப்பிட்டிருக்கிறார்கள். எப்படியும் புதிய சட்டப்படி மன்ற முறை செயல்பட வேண்டுமானால், அடுத்த நவம்பரிலே வருகிற நகரசபை அதுபோல வேறு சில அதிகாரிகளும் நகர நிர்வாகத்திற்குப் பொறுப்பேற்க வேண்டியவர்களாக இருக்கிறார்கள். சுகாதார அதிகாரியைப் போன்றவர்கள் திறம்பட செயலாற்றுவதற்கு வட்டத்திற்கு ஒருவராக அமைக்க வேண்டிய நிலைமை ஏற்படும்.

நகராட்சி மன்ற ஆணையாளருக்குப் புது அதிகாரம் கொடுக்கப்படுவதனால் இவற்றையெல்லாம் நன்றாகப் பரிசிலனை செய்யவேண்டியதாக இருக்கிறது. இவைகளை எல்லாம் நன்றாகப் பரிசிலனை செய்ய வேண்டியிருப்பதனால் திருத்தத் தீர்மானத்தில் கூறப்பட்டதுபோல இம்மசோதாவை ஓர் ஆய்வுக் குழுவுக்கு விடுவதில் தவறு இல்லை. காலம் இருக்கிறது. வாய்ப்பு இருக்கிறது. இன்றைக்கு இருக்கக்கூடிய சூழ்நிலை உடனடியாக இதை நிறைவேற்றுவதற்கு உகந்ததாக இல்லை. இதைச் செயல்படுத்த நகராண்மைக் கழகத்தின் அடுத்த தேர்தல் வருகிற நவம்பர் மாதம் வரையில் பொறுத்திருக்கவேண்டும். ஆகவே அடுத்து வருகிற சட்டசபையிலேயே நிறைவேற்றிக் கொள்ளலாம். இந்தச் சட்டசபையின் காலத்திலேயே நிறைவேற்றிவிட வேண்டும் என்றாலும் அடுத்த டிசம்பர் மாதக் கூட்டத் தொடரில் நிறைவேற்றிக் கொள்ளலாம். ஆகவே இதை மறுபடியும் பரிசிலனை செய்ய வேண்டும், நான் கூறிய விளக்கத்தின் அடிப்படையில் என்று தெரிவித்துக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

**Sri M. S. SELVARAJAN**: கனம் தலைவர் அவர்களே, சென்னை மாநகர ஆட்சி சீர்திருத்தம் குறித்து கொண்டுவரப்பட்டிருக்கிற இந்த மசோதா முற்றிலும் வரவேற்கத் தகுந்தது. சென்னை மாநகரம் சமீப காலத்தில் தக்கவிதமாக வளர்ச்சி அடைந்து வருவது உண்மைதான். சென்னை நகரம் எப்பொழுதுமே இயற்கை எழில் வாய்ந்த நகரம். தெற்கு வடக்காகக் கடற்கரையையொட்டி மூன்று நான்கு மைல் அகலத்திற்குள்ளேயே நீண்டு இருக்கிற நகரம். இந்தத் தேசத்தில் மத்திய அரசாங்கத்தில் வேலை செய்கிற சிப்பந்திகள் யாராக இருந்தாலும் சென்னை நகரத்தில் வந்து வேலை செய்வது என்றால் ரொம்பவும் விரும்பி வருகிறார்கள். காரணம் முன்னே சொன்னேன். டெல்லி நகரத்தில் இல்லாத வாய்ப்பு, கல்கத்தா நகரத்தில் இல்லாத வாய்ப்பு இங்கே இருக்கிறது. சாதாரண மனிதன் முதற்கொண்டு, நடுத்தர மனிதர்கள் வரையில் கடற்கரைக் காற்றை அநுபவிக்க இங்கே வாய்ப்பு இருக்கிறது. ஆகவே இந்த நகரத்தின் பொது சுகாதாரம் எல்லா வகையிலும் பாதுகாக்கப்படுவதற்குத் தக்க நடவடிக்கை எடுக்கவேண்டியது அவசியம்தான்.

14th November 1961] [Sri M. S. Selvarajan]

அதற்காக வேண்டி இந்த மசோதா கொண்டுவரப்பட்டதும், மசோதாவிலே சென்னை நகரத்தை வடக்கு, தெற்கு என்று பிரித்து இரண்டையும் தனித்தனியாக நிர்வாகம் செய்வதற்கு உதவி கமிஷனர்கள் என்று நியமனம் செய்ய உத்தேசித்திருப்பதும் வரவேற்கத் தக்கது. என்னுடைய அபிப்பிராயம் இதற்கு முன் தெரிவித்த கருத்துப்போல சிற்சில வட்டங்களின் பொறுப்பு மட்டும் அசிஸ்டெண்டு கமிஷனர் என்பவர்களிடம் இருப்பதோடு அல்லாமல் வார்டுதோறும் ஆங்காங்கு இருக்கக்கூடிய முனிஸிபல் அட்மினிஸ்ட்ரேஷன் ஆபீசுகளையும் அவர்கள்கீழ் வைக்கலாம். அப்படி வைப்பதில் தவறு இல்லையென்று கருதுவேன்.

கடந்த காலத்தில் சென்னை நகரத்தின் நிர்வாகம் நல்லமுறையில் நடந்திருக்கிறது என்றால் நிர்வாகஸ்தர்கள்தான் அதற்குக் காரணம் என்று நான் கருதவில்லை. இயற்கையாக சென்னை நகரம் வளர்ந்து வருகிறது. இந்த வளர்ச்சிக்கு ஏற்றவகையில் நிர்வாகத் துறை வளர்ச்சி அடையவில்லை. இன்னும் சற்று நல்ல முறையில் இயங்கக்கூடிய வகையில் அதை உருக்குவிக்க முடியும். அந்த அளவுக்கு இது வளர்ச்சி பெறவில்லை என்று சொல்லவேண்டும். சென்னை நகரில் உள்ள இதர பல்வேறு ஸ்தாபனங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கிறபோது, ஜில்லாபோர்டு நிர்வாகம், மற்ற முனிஸிபல் நிர்வாகங்கள் இவற்றோடு ஒப்பிட்டுப் பார்க்கிறபோது சென்னை நகரின் நிர்வாகம் சிறந்ததாக இல்லையென்ற குற்றச்சாட்டைச் சொல்ல முடியும். கடந்த காலத்திலும் சரி, இன்றும் சரி, எந்த அளவுக்குத் திறம்பட நிர்வாகம் இருக்கவேண்டுமோ அந்த அளவுக்கு இல்லை. அதில் பல கோளாறுகள் இருக்கின்றன என்பதை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. அவற்றைச் சீர்திருத்தும் முறையில் இந்த மசோதா வந்திருப்பதும், கவுன்ஸில் பிரதிநிதிகள் எண்ணிக்கையை 100-ஆக உயர்த்துவதும் இரண்டு உதவி ஆணையாளர், ஆணையாளருக்கு பி.ஏ. என்றெல்லாம் நிர்வாகத்தை அமைக்கிற முயற்சியைப் பாராட்டுகிறேன். இதுமட்டும்போதும் என்று நான் கருதவில்லை. பப்ளிக் ரிலேஷன் ஆபீசர் என்று அங்கும் ஒருவர் நியமிக்கப்பட்டால் சாதாரண மக்களும்கூட அங்கு சென்று கஷ்டமில்லாமல் பல காரியங்களைச் சாதித்துக் கொள்ள முடியும், விவரங்களைப் பெற முடியும். இன்றைக்கு சென்னை நகரத்தில் சுகாதார வசதிகள் குறைந்து கொண்டே வருகின்றன. சுகாதார அமைப்பைச் சரியாகச் சீர்திருத்தத் தக்க நடவடிக்கை எடுக்க வேண்டும். இப்பொழுது அவற்றில் பல்வேறு விதமான சங்கடங்கள் வந்திருக்கின்றன. அதில் தகராறு ஏற்பட்டு அப்பீல் என்று வருமானால் அரசாங்க அதிகாரிகளைக் கொண்ட கமிட்டிக்கோ, அரசாங்கத்திற்கோகூட வரும்படியாக அமைப்பதுதான் சரி, அதுவன்றிக் கவுன்சில் கமிட்டி என்கிறபோது சரியாக அமையாது என்று சொல்ல விரும்புகிறேன். இன்றையதினம் தொழில் வரியாகட்டும், வீட்டு வரியாகட்டும் சரியான முறையில் வசூல் செய்யப்படவில்லை என்று சொல்ல முடியும். இன்றையதினம் ஐந்து வருஷங்களுக்கு முன்பு இருந்த வாடகை இப்போது சென்னை நகரத்தில் ஐந்து

மடங்காக உயர்ந்திருக்கிறது என்பது எல்லோருக்கும் தெரியும். அதற்கேற்றபடி ஐந்து வருஷங்களுக்கு முன்னால் எத்தனை பணம் வீட்டு வரியில் வந்ததோ அதைப்போல ஐந்து மடங்கு அதிகமாக வருமானம் வரவேண்டும். ஆனால் அப்படி வாவில்லையென்றால் ஒன்று வரியை ஏமாற்றுகிறவர்கள் அதிகமாகிவிட்டார்கள், அல்லது வசூல் செய்வதற்குத் தக்க நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்படவில்லை என்றுதான் சொல்லவேண்டும். இன்றைக்கு சென்னை நகரில் வேலை செய்கிற சர்க்கார் சிப்பந்திகளிடத்தில் இருந்துகூட சரியான முறையில் தொழில் வரியை வசூல் செய்ய நடவடிக்கை எடுக்கப்படவில்லை என்று என்னால் சொல்லமுடியும்.
10-00 a.m. அவசியம் நேரிட்டால் ட்ரங்க் ரோடுகளையெல்லாம் சர்க்காருடைய நேரடியான பொறுப்பில் கொண்டுவருவதன் மூலமாக நல்ல முறையில் கவனித்துக் கொள்ள முடியும். இந்தத் திருத்த மசோதாவின் மூலமே அந்த இனங்களைச் சேர்த்துவிட முடியுமா என்று பார்க்க வேண்டும்.

கமிஷனரைப் பொறுத்த மட்டில் ஐ.ஏ.எஸ். ஆபிசரைத்தான் போடவேண்டுமென்ற நிலை இருந்தால் அதை மாற்றியமைக்க முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும். மதுரை, திருச்சி, கோயம்புத்தூர் போன்ற நகரங்களில் பயிற்சி பெற்றவர்களுக்கு உயர்வு கொடுப்பதன் காரணமாக, நல்ல அனுபவம் பெற்றவர்கள் சென்னை நகரில் பணியாற்றும் நிலை பிறக்கும். ஐ.ஏ.எஸ். அதிகாரிகள் நல்ல நிர்வாகம் தெரிந்தவர்களாக இருந்தபோதிலும், இது போன்று மாற்றியமைப்பதால் மற்றப் பல நகரங்களில் இருப்பவர்கள் இங்கு வந்து பணியாற்ற உதவிகரமாக இருக்கும் என்பது என்னுடைய பணிவான கருத்து. மூன்று வருஷம் கழிந்த பிறகும் கமிஷனரையும் மறுபடியும் மூன்று வருஷங்களுக்கு அங்கேயே வேண்டுமானால் வைத்துக்கொள்ளலாம் என்பதற்கு வசதி செய்வது அவசியமல்ல. மீண்டும் ஒருவரே அங்கு இருந்தாக வேண்டுமென்ற அவசியமே இருக்காது.

சுகாதாரச் சட்டத்தைப் பொறுத்த மட்டில் எடுத்துக்கொண்டால், அதை நியாயமாக அமல் நடத்துவதாக இருந்தால், நிச்சயமாக நகருக்குள்ளே விறகுக்கடை, கரிக் கடை ஆகியவற்றுக்கு அனுமதி கொடுக்க முடியாது. இன்றையதினம் இருக்கும் சிறு சிறு கடைகள் ஜனங்களின் வசதிக்காக ஆங்காங்கே இருக்க வேண்டியது அவசியந்தான். ஆனால் சுகாதாரச் சட்டத்தைச் சரியானபடி அமல் நடத்துவதாக இருந்தால், இந்தக் கடைகளில் பல இருக்க முடியாத நிலைமை ஏற்படலாம். சட்டத்தில் கோளாறு? அல்லது நிர்வாகத்தில் கோளாறு? இந்தச் சட்டத்தை எந்த அளவுக்குத் தளர்த்த முடியுமோ அந்த அளவுக்குத் தளர்த்தினால் ஜனங்களுக்கு உதவிகரமாக இருக்கும். இத்தகைய கடைகளுக்கு ஒரு அதிகாரியால் லைசன்ஸ் மறுக்கப்படுமானால், லைசன்ஸ் கமிட்டிகள் மூலமாகவோ, மற்றும் யாருடைய தயவின் மூலமாகவோ லைசன்ஸ் பெறும் சிறுமை இருக்கிறது. அதிகாரத்தின் மூலமாகத் தகாத காரியங்கள் நடப்பதைப் பார்க்கிறோம். இந்தச் சுகாதாரச் சட்டமானது சிறு சிறு தொழில்களைத் தொடங்கத் தடையாக

இருக்கிறது. இவற்றையெல்லாம் யோசித்து, தகுந்த மாறுதல்களோடு கூடிய சட்டமாக இதை நாம் நிறைவேற்றவேண்டும். இரண்டு, மூன்று நாட்களுக்குள்ளாக இவற்றையெல்லாம் பூரணமாகப் பரிசீலனை செய்ய முடியாதென்றால், தவறுகளுக்கு இடமில்லாத முறையில் இதை நிறைவேற்ற பொறுக்குக் கமிட்டிக்கு இதை அனுப்பி பரிசீலனை செய்தால்கூட அதிலே தவறு இல்லை. இதை இந்த சட்டசபைக் கூட்டத் தொடரிலேயே நிறைவேற்ற வேண்டிய அவசியத்தை அமைச்சரவர்கள் ஆரம்பப் பேச்சிலே குறிப்பிடவில்லை. ஒருகால் எங்களையெல்லாம் திருப்திபடுத்தக் கூடிய அளவில் காரணங்களைத் தெரிவித்தால் அந்தக் கருத்துக்கு மதிப்புக் கொடுக்க முடியும். அவ்வளவு அவசரம் இல்லையென்ற நிலைமையில் மேலும் மேலும் பரிசீலனை செய்து பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்பி தகுந்த ஒரு சட்டமாக, கோளாறு இல்லாத சட்டமாக இதை நிறைவேற்ற வேண்டுமென்று பணிவான என்னுடைய கருத்தைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

* SRI K. VINAYAKAM : Mr. Deputy Speaker, Sir, I rise to oppose the amendment given notice of by Sri S. M. Annamalai requesting this House to refer this Bill to another Select Committee to go into the different provisions. This Madras City Municipal Act was first passed during 1919. Sufficient water has flown under the bridge and the Council as it is, is the body who are responsible for the administration of the City. The Councillors are men with long experience and it is only after working this Act for the past thirty or fourty years the necessity for amending this Act has been felt and an amending Bill has come before the House. I have been a Councillor of the Madras Corporation for well over 12 years and with the little experience I gained from that Council, I could well vouchsafe that there is immediate necessity toamend the old Act. This Bill which is now before us contains very good features and many points deserve consideration. In the first place, the first Act was passed in 1919 when the city was a small one and the population was considerably less, and the municipal needs of the people were also considerably less. The old Act was not very properly conceived and in the working of the Act we came across many difficulties. They have got to be solved quickly. It is only in the light of experience gained in the working of the previous Act, that this Bill is now being brought before us for discussion. The original Act contained a lot of defects.

The Constitution of the Corporation is as follows. There is a Council. There are many Standing Committees. There is the Commissioner who is in charge of administration. Proposals have got to emanate from Commissioner and they would be placed before the relevant Standing Committee and only after perusal by that Committee, the proposals will have to come to the Municipal Council in general. In practice we have found that it involves undue delay for a proposal to be finally passed by the Council. Such being the case we were beset with a lot of

[Sri K. Vinayakam] [14th November 1961

difficulties. Very many good proposals which had to be passed through quickly, were not passed through quickly because of all these steps which we had to get through before a proposal could come finally before the Council. The need for decentralization was felt and Government came to the conclusion that it should be possible to distribute these powers of administration to different agencies. As it is, the Corporation Council is entirely responsible for the administration of the entire City.

Unless the proposition is approved by the Council as a whole, the Commisioner is incapacitated to give effect to these proposals. There are lot of difficulties. The Corporation being a smaller Government, it controls finance to the extent of four to five crores. It is a smaller Government when compared to the State Government. It is an autonomous body and the Government do not interfere unless there is anything repugnant to the Constitution or to the Act. They have got complete powers to carry on the administration. Such being the case they are the lords of the situation. They take their own time to get things done.

For instance, suppose a contract has to be given for laying underground sewage in extended area like Kodambakkam, what happens? The Commissioner must conceive the idea. He will have to submit the proposals to the Government for approval. Government gives its final approval after a long time. This will have to be placed again before the Standing Committee and Works Committee. They take their own time. Finally the Taxation Committee has to see it. It takes a long time. If they differ in their views a joint Committee has to sit and consider. After their approval, it will be placed before the Council. The Council is more often engaged in different activities and they keep on adjourning it. I have been a Councillor and I know what it is. I am talking with a little experience. Any good proposition which is good to the public naturally takes two or three years. Sometimes it is shelved also and the Commissioner cannot do anything unless the Council approves. He cannot even report to the Government stating that the Council stands in his way and so he could not push through the scheme. That would be undemocratic. The Government does not interfere. In these circumstances nothing happens if the Council does not want it. If the Council has made up its mind not to push through any scheme, not even God can help us. The State Government will not interfere. In the ordinary situation it will not interfere. That has been the experience.

I am giving another face of it i.e., the new Bill. Regarding the Commissioner, he cannot punish anybody if he wants justly to punish his subordinates. All these officers, who are appointed in the Corporation administration have gained, whether we like it or not, and they have got some vested interests. They have got some in the Standing Committee to support them and also

14th November 1961] [Sri K. Vinayakam]

some Councillors to support them. If an officer of the Corporation has got the capacity to gain the confidence of about five or ten vociferous councillors, pitiable is the condition of the Commissioner, who wants to enforce some amount of discipline against such an officer. With the result when once they are appointed to the Corporation administration they retire there. There is no scope for punishing them. If the Commissioner punishes them even lesser than his limit, they can straight away appeal to the Standing Committee and get things redressed. Then the Commissioner cuts a very sorry figure because there is the Standing Committee, which is ready enough to go against the disciplinary action imposed by the Commissioner and then there is finally the Council to come to their aid. With the result, out of experience I am telling all this, it has not been possible for the Commissioner to enforce strict discipline upon his subordinates. Some of the officers, know the knack to get things done with the aid of Councillors and the Standing Committee before the very nose of the Commissioner. So there is an urgent word for reorganisation the internal administration of the Corporation. There are very good proposals relating to the City of Madras which could be implemented in the interests of the people. These good proposals also could be successfully thwarted by the officers if they wished it. There is one more nauseating feature in the old Act. There if a property-tax is levied upon a building and the assessee thinks that it is in excess, he has got a right of appeal to the Taxation Appeals Committee. The composition of the Taxation Appeals Committee is like this. Two Councillors elected by the Council plus a Judicial Officer, who has been lent to serve on the administration, constitute the Committee. The quorum for the Committe is two and more often these elected representatives stand against the judicial officer. In the recent past, I have known occasions where these two members, who serve on the Appeals Committee have been writing judgments of their own. You know, Sir, pretty well the politicians, who are not well up in law and who are not authorities on points of law, begin to write their own judgments and then the poor Chairman of the Appeals Committee, who is the judicial officer, who knows what is law and what is proper in the circumstances, has simply to keep quite out of necessity. All these Councillors, who serve on these Committees carry the day. There is a provision for appeal and the appeal lies only to the High Court, not even to the Subordinate Judge or the City Civil Court Judge. That is the provision in the Act. I have known in the recent past that two Councillors, who served on this Committee, often proved a deadweight always attempting to thwart what is to be done properly under the circumstances. In this Bill we have contemplated the Constitution of a Tribunal with only one judicial officer and his decision is final and there is provision for appeal to High Court.

These are some of the features in the new Bill. We are now contemplating to constitute Circle Committees, Central Committees instead of having five Standing Committees, who

guide the entire destiny of the Corporation in their own whims and fancies. Now we have contemplated a new thing. We have divided the City of Madras into 10 circles. There will be a Central Committee in charge of the administration in general, smaller committees in charge of things like, opening of schools, hospitals, etc. These local administrative matters are vested in the Circle Committees and the Circle Committees consist of ten Councillors elected by their Divisions plus one Scheduled Caste Member, if there is no Scheduled Caste Member already elected in that circle. That is a very good feature in this Bill. It gives opportunity for smaller units like the Circle Committee to be in charge of local administration, who will directly be in touch with the local needs of the people and who will be in a position to deal with the problems brought to them. If we divide the administration into ten units like this, the local agency will look after their needs and they need not run all the way to the General Council for small thing to be approved. As it is to-day, Sir, everything will have to go through the Commissioner and the standing committee and if there is differance of opinion they have again to pass through the Standing Committe plus Finance Committee lastly the Council and this involves unusual delay. So we have decentralised the administration. We give powers to Circle Committees, we allot finance to a certain extent and they are at liberty to utilise the funds on the model of the Panchayat Union Council. We did not trust the Districct Boards and we have abolished them because they were unwieldy bodies. We have given power to the municipal councils to carry on the administration and this is working beyond reasonable doubt without much difficulty. So the same pattern should be applied to the Madras Corporation also.

One other thing regarding the administrative officer. The Commissioner has to go through all the files in the Corporation and he has to sign cheques for Rs. 50, Rs. 20 and Rs. 25. That is what is obtaining under the existing Act. I do not know the present Commissioner, but I know the previous Commissioner, when I was a Councillor. He will not be able to see the Councillors as he will be engaged in signing cheques. That is very ordinary and routine work which could very well be entrusted to any other officer. But, that is not done and he will be taking not less than two hours every day from 11 a.m. to 1 p.m. to sign these cheques. During this time, he refuses to see the Councillors. I do not want to accuse the Commissioner. That is not my object. He too has to discharge his functions and he must have some time to sign cheques. My point is that the system should be changed and some other officers could be entrusted with the job of signing these cheques. After the formation of the Circles, there may be some improvement in the disposal of files, etc.

There are various good features in the Bill which I will be glad to refer to when we take up clauses for consideration. One thing I wish to make clear and that is I am totally against referring this Bill to a Select Committee. Already, a Committee has been

14th November 1961] [Sri K. Vinayakam]

constitutional and we had taken into that Committee not only Congressmen, but also members from the Opposition parties like the Dravida Munnetra Kazhagam. Hon. Member Sri V. K. Ramaswamy Mudaliyar had the pleasure of serving on that Committee. We had provided opportunities for different parties in that Committee. Not only that. We had on that Committee also some Members from the Upper House. We also gave opportunity for the Corporation Administration to appear before the Committee and give evidence before it. We had noted their requirements and suggestions and we have adjusted according to their needs also. We had also invited the Mayor, Deputy Mayor, Commissioner, the Chairman of the various Standing Committees, the Deputy Commissioner and all those people. They gave evidence before us and after taking into consideration their views, the present Bill has been drafted and brought forward before the Legislature and at this state, I cannot understand of what earthly use will it be to refer the Bill over again to a Select Committee. That will only amount to dilatory tactics. The City Corporation Administration needs immediate reform and I would even suggest that the Government should take charge of the administration of the Corporation. Because, it is not at all well as it is. Gradually, we are heading towards a crisis. The present situation should not be allowed to continue for long. The Bill should be considered straightway on the floor of the House. If the Bill is not passed now, the Government will be well-advised to interfere and take the administration of the Corporation in their own hands. But, I am, however, sure that the Government will not do that, being democratic in outlook, especially on the eve of the General Elections. So, they may not take that dire step. But, we cannot agree to this kind of request that the Bill should be referred to a Select Committee, as if wonderful results will accrue by constituting another Select Committee. In my view, that will only amount to wastage of time. This Bill has got to be passed into law as early as possible. With these words, I resume my seat, Sir.

*SRI C. R. RAMASWAMI : Mr. Deputy Speaker, I welcome this Bill. This Bill has been brought forward after considerable deliberation and long discussion by the Legislative Committee that was set up by this House to go into the various aspects of Local Administration and the City Municipal Administration. For over three years, we have deliberated, we have considered and we have looked into the various aspects of Municipal reform, particularly, with reference to the Madras City. As a sequal to our deliberations, this Bill has been brought forward. I am totally opposed to the move for referring this Bill to a Select Committee, as the Legislature Committee appointed to go into the various aspects of Local Administration has already devoted much time and attention to this subject.

Sir, the first stage of reform of City Municipal Administration took shape when the City was divided into 100 Divisions and the Councillors were elected on that basis, in the last Municipal

Elections. With the City's growing population from 15 lakhs to 18 to 20 lakhs, it was necessary that adequate representation to all parts of the City should be given in the City Council. With this end in view, the Government have rightly come forward with the Bill to completely reorganise the City Municipal Administration. As a first step in that direction, they have increased the number of divisions from 50 to 100 brought about a balanced distribution of seats so that all the localities in the city could get proper representation in the City Council. The Government have also done one very good thing, viz., the aboliton of the system of electing Aldermen to the Corporation of Madras. Rightly or wrongly, Aldermen did continue to exist in various Corporations of the World. However, in Madras it was felt that the City Corporation should consist of only directly-elected representatives of the people and that the Aldermen should go. The Government too welcome the proposal and really, the decision to abolish the system of having Aldermen in the Council was a healthy move in the right direction. Soon after the formation of 100 divisions and conduct of elections to those 100 divisions, the question of reorganization of the Municipal Administration itself was on the anvil. The Legislature Committee went into it in great detail and they considered that it was desirable to divide the City into 10 circles and have Circle Committees charged with the responsibility of directly managing the affairs of the respective circles or areas. A Circle Committee was fixed as an Assembly Constituency. Definite powers and responsibilities have been given to these Circle Committees. These Committees will now be able to discharge their responsibilities more usefully and in a better way to the rate-payers of Madras City.

As we are all aware, the administration of the City has grown beyond all proportion and the income has also grown and along with it the expenditure too. The Corporation's responsibilities are tremendous and they are not in a position to discharge all the responsibilities cast upon them. We see it every day. Year after year, when the floods come, we are able to notice the inability of the Corporation to tackle the problem. The drainage facilities in the City are very poor and even when we have slight rain, the low-lying areas get inundated. In fact, unless timely taken by the Corporation authorities, in the next few months, the action is taken by the Corporation authorities, in the next few months, the position will deteriorate and the poor people dwelling in the low-lying areas would be very severely affected by flood havoc. I wish this aspect of the matter is taken due note of and proper steps are taken to help the poor hut-dwellers. The responsibilities of the Corporation are very great and they find it diffiecult to discharge those responsibilities effectively and efficiently. Of course, they have always been complaining of meagre resources and that the Corporation's resources are quite insufficient to meet the growing needs and so on. That is the clamour that we have been hearing. But, my own feeling is that apart from the resources, the Administration itself requires toning up. The executive staff the

14th November 1961] [Sri C. R. Ramaswami]

Commissioner and others are being heckled and they are not in a position to discharge their responsibilities in a satisfactory manner. The Commissioner is not able to take decisions himself. The moment he takes a particular decision, if it is not favourable to some, immediately, steps are being taken in the Council to thwart and reverse his decision. In my view, greater powers should be given to the executive staff. Unless they had adequate power to discharge their responsibilities in the matter of dealing with the City's major problems like drainage, water-supply, placing of orders and accepting contracts, we cannot hope much from the City Corporation Administration. All these things should be attended to as expeditously as possible. The main bottleneck, the Commissioner and the executive as such are faced with, is in regard to placing of contracts. I know from personal knowledge that these contracts are not placed in time by the Standing Committees. The Standing Committees, themselves take the responsibilities of placing these contract, but they do not do it quickly. They hold joint conferences without fruitful results. Tenders are relegated to the background or shelved. Something should be done immediately to improve matters. The roads are neglected, by-lanes are neglected, there is no proper drainage. The City's water-supply system is very bad. But for our having introduced the rapid mechanical filter, the position would have become worse. Previously, before the introduction of the mechanical filter, filter water was used to be mixed with unfilter water. Only after we had the mechanical filter, the position has improved to some extent, though not to the full extent. Something should be done to solve the water-supply problem in a satisfactory manner. All these problems have to be tackled and tackled effectively. For this purpose, we have to give the executive staff sufficient powers. Only then, they will be in a position to deal with all these matters expeditiously. They should not be bamboozled into taking action in the manner in which the elected representatives want them to take. My own feeling is that the time has come when we should do something more drastic than what we have been contemplating. We must give greater power to the Commissioner and the executive staff. The executive should have power to deal with important problems like water-supply, drainage, etc., even without reference to the Council. They should have power, in all such matters, to call for tenders, accepting tenders and placing orders, etc. Even for putting up public convenience, it takes six months as it is. Whether it is a matter of providing a good road, or providing drainage facilities or provision of water-supply or any other amenities to the citizens, the City Corporation Commissioner and the other executive staff should have adequate power to take action.

The main bottleneck has been the Standing Committee and the way in which they have been disposing of their papers. People may rightly ask, how was the Corporation like when the Congress Party was in charge of it? I myself was a Member of the Corporation for three years and I can tell you that it was not half so bad as it is to-day. Things were quite different and we were able 10-30 a.m.

SRI S. M. ANNAMALAI : Sir, I move the following amendment :—

In sub-clause (i) in line 45, for the word " Commissioner " substitute the words " Central Committee " and omit **sub-clauses (ii) and (iii).**

The amendment was duly seconded.

DEPUTY SPEAKER : The clause and the amendment are before the House for discussion.

SRI S. M. ANNAMALAI : இதற்கு முன்னால் ஸ்டாண்டிங் கமிட்டிக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதை மாற்றி தற்போது கமிஷனருக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. கமிட்டிக்கு இருந்த அதிகாரத்தை மாற்றிக் கமிஷனருக்குக் கொடுக்க வேண்டிய அவசியமில்லை. அதற்குப் பதில் சென்ட்ரல் கமிட்டிக்கு அதிகாரம் கொடுக்கலாம் என்று நான் திருத்தம் கொடுத்திருக்கிறேன். இதைச் சர்க்கார் ஏற்றுக்கொள்ளுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

**THE HON. SRI C. SUBRAMANIAM :** ஸ்டாண்டிங் கமிட்டிக்கு இருந்த அதிகாரம் சென்ட்ரல் கமிட்டிக்குப் போக வேண்டுமா அல்லது கமிஷனருக்குப் போகவேண்டுமா என்று பரிசீலனை செய்து பார்த்து, கமிஷனருக்கே அந்த அதிகாரம் இருந்தால் போதுமென்று முடிவு செய்திருக்கிறோம். ஆகவே, இதை "சென்ட்ரல் கமிட்டி" என்று மாற்ற வேண்டிய அவசியமில்லை.

The amendment was put and lost.

Clause 59 was put and carried.

Clauses 60 to 82 were put and carried.

*Clause* 83.

11-30 a.m. DEPUTY SPEAKER : The question is—

' That clause 83 do stand part of the Bill.'

**SRI S. M. ANNAMALAI :** நான் 83-வது பிரிவைப்பற்றிச் சொல்லலாம் என்று நினைக்கிறேன்.

' Provide for the procedure to be followed at meetings of the Contracts Committee, the Licence Appeals Committee and Appointments Committee and for the conduct of business and the number of members which shall form a quorum at such meetings '.

இதை சர்க்கார் நிர்ணயிக்க வேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. முக்கியமாக கோரம், கமிட்டிகள் எப்படியெப்படி இயங்க வேண்டும் என்பவைகள் போன்ற முக்கியமான விஷயங்கள் குறித்து இந்த மசோதாவிலே குறிப்பிட்டிருக்க வேண்டும். ரூல்ஸ் மூலமாக, விதிகள் மூலமாக சர்க்கார் நடத்தலாம் என்பது உசிதமல்ல. இவ்வளவு பெரிய விஷயங்களை விதிகளின் மூலமாக நடத்த வேண்டுமென்று சொல்லுவது உசிதமல்ல. ஆக, இதைப் பரிசீலனை செய்து சர்க்கிள் கமிட்டி போன்றவைகள் எப்படி இயங்க வேண்டுமென்ற

14th November 1961]    [S. M. Annamalai]

விஷயங்களெல்லாம் இந்த மசோதாவில் சேர்க்கப்பட்டால் நலமாக இருக்கும். இதை சர்க்கார் பரிசிலனை செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

**THE HON. SRI C. SUBRAMANIAM** : Procedure எப்போதும் ரூல்ஸிலே இருப்பதுதான் நல்லது. இல்லாவிட்டால் சிறு மாறுதல் செய்ய வேண்டுமானாலும் அதற்காக ஒரு மசோதா கொண்டுவந்து இங்கே நிறைவேற்ற வேண்டிய நிலைமை ஏற்படும். "ப்ரொஸீஜர்" பொறுத்த வரையில் ரூல்ஸிலே இடம் செய்வதுதான் வழக்கம். இதிலே தவறு ஒன்றும் கிடையாது.

Clause 83 was put and carried.

Clauses 84 to 94 were put and carried.

*Clause* 95.

DEPUTY SPEAKER : The question is—

'That clause 95 do stand part of the Bill.'

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move the following amendment :—

For clause (vi) substitute the following :—

(vi) For rule 20, the following rule shall be substituted, namely :—

"20 (1) Any member of the Central Comittee or the Corporation Accounts Committee other than the Mayor who fails to attend four consecutive meetings shall cease to be a member of the Committee concerned.

(2) Any person who, under sub-rule (1) has ceased to be a member of the Central Committee may be restored to office by the Central Committee or re-elected by the Circle Committee concerned.

(3) Any person who, under sub-rule (1) has ceased to be a member of the Corporation Accounts Committee may be restored to office by the Corporation Accounts Committee or re-elected by the Council".

The amendment was put and carried.

Clause 95 as amended was put and carried.

Clauses 96 to 101 were put and carried.

*Clause* 102.

DEPUTY SPEAKER : The question is—

'That clause 102 do stand part of the Bill.'

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move the following amendment :—

In sub-clause (i) for the words "or the Corporation Accounts Committee" substitute the words "the Corporation Accounts Committee, the Contracts Committee, the Licence Appeals Committee or the Appointments Committee".

The amendment was put and carried.

Clause 102 as amended was put and carried.

SCHEDULE. I.

DEPUTY SPEAKER : The question is—

' That Schedule I do stand part of the Bill. '.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move the following amendment :—

In Schedule I in column (3) for the words " Central Committee " occurring against entries " 239, sub-sections (1) and (2) ", " 240 " " 251 " sub-sections (1) and (2) ", " 252 ", " 255 ", sub-section (2) " and " 257-BB, sub-section (2) ", in column (1) substitute the words " Licence Appeals Committee ".

The amendment was put and carried.

Schedule I as amended was put and carried.

SCHEDULE. II.

DEPUTY SPEAKER : The question is—

' That Schedule II do stand part of the Bill.'

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move the following amendment :—

In Schedule II for rule 1 substitute the following :—

" 1. All Standing Committees, Additional Standing Committees, and the Accounts Standing Committee constituted under the provisions of the Principal Act are hereby abolished with effect from the commencement of this Act and the Central Committee, every Circle Committee, the Corporation Accounts Committee or the Licence Appeals Committee constituted in accordance with the provisions of the Principal Act, as amended by this Act, shall elect its Chairman, as soon as may be, after the commencement of this Act."

The amendment was put and carried.

Schedule II as amended was put and carried.

Clause I and the Preamble were put and carried.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : Sir, I move—

' That the Madras City Municipal (Amendment) Bill, 1961 (L.A. Bill No. 35 of 1961) as amended be passed.'

DEPUTY SPEAKER : Motion moved—

' That the Madras City Municipal (Amendment) Bill, 1961 (L.A. Bill No. 35 of 1961) as amended be passed.'

14th November 1961]

**SRI S. M. ANNAMALAI :** ஆன் எ பாயிண்ட் ஆஃப் ஆர்டர், ஸார், 114-வது விதியின்படி, சர்க்காரே இதற்கு பலவித திருத்தங்கள் கொடுத்த காரணத்தினால் இந்த மசோதாவை "ஸப்ஸீக்வெண்ட் மீட்டிங்கில்" எடுத்துக்கொள்ளலாம் என்ற பிரேரணையைப் பிரேரேபிக்கிறேன். இதை உதவி சபாநாயகர் கவனித்து அடுத்த கூட்டத்தில் பாஸ் செய்யும் முறையில் இதை ஒத்திப்போட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

DEPUTY SPEAKER : They are only verbal amendments and not very substantial amendments. I think we need not postpone this to to-morrow. That is my ruling.

If the hon. Member wants, he can speak on the motion now.

**SRIMATHI T. N. ANANDANAYAKI :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்தப் புதிய திருத்த மசோதாவை ஒரு ஜாயிண்ட் கமிட்டி போட்டு அவர்கள் அதை தீர ஆலோசித்து, பின்னரும் கார்ப்பொரேஷனைக் கேட்டு, புது உருவம் எடுத்து வந்திருக்கிறது. ஐம்பது டிவிஷன் கவுன்சிலாக இருந்துகொண்டு நடந்த வேலையைக் காட்டிலும் 100 டிவிஷன் கவுன்சிலாக ஆன பிறகு கூட்டம் அதிகரித்ததே தவிர வேலை ஒன்றும் நல்ல முறையில் நடைபெறவில்லை. இருந்தபோதிலும் இதை ஏற்றுக்கொண்டோம்—நடத்தி வருகிறோம். இதிலே நாம் ஒரு மாபெரும் மாறுதலை சர்க்கிள் கமிட்டி மூலம் கொண்டு வந்திருக்கிறோம். இந்த மசோதாவை முதலில் கொண்டு வந்தபோதே சட்டசபை அங்கத்தினர்களை எக்ஸ்-அஃபிஷியோ மெம்பர்களாக ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டோம். அப்படி சேர்த்துக்கொண்டால் டிஸ்ட்ரிக்ட் போர்டு, பஞ்சாயத்து யூனியன் இவைகளெல்லாம் தொல்லை தரும் என்ற காரணத்தினால் வேண்டாம் என்று கூறிவிட்டார்கள். நகரப் பிரதிநிதிகளின் கஷ்டங்களை உணரவேண்டும் என்ற காரணத்தினால் இந்த மூன்றாவது ரீடிங்கில் ஒரு சில கருத்துக்களைக் கூற விரும்புகிறேன். நகரத்தில் இருக்கும் சட்டசபை உறுப்பினர்கள் மற்ற மாவட்ட உறுப்பினர்கள் மாதிரி வேறு துறைகளில் வேலை செய்ய இயலாது. காரணம், வீதி போடுவது, பாலம் கட்டுவது, இன்னும் இதே போன்று ஆஸ்பத்திரி ஆரம்பிப்பது, பள்ளிக்கூடம் ஆரம்பிப்பது போன்ற இப்படிப்பட்ட பொறுப்புகளெல்லாம் கார்ப்பொரேஷன் கையில்தான் இருக்கிறது. ஆகையால் அந்தத் தொகுதி அங்கத்தினர் எதாவது செய்ய வேண்டுமானாலும் கவுன்ஸில் மூலமாகத்தான் செய்யவேண்டியிருக்கிறதே தவிர வேறு வழி கிடையாது. அப்படி இருக்கும்போது எங்களை அங்கத்தினர்களாகப் போடாவிட்டால் ஒன்றும் செய்ய முடியாத நிலை ஏற்படும். அது மாத்திரமல்லாமல், எங்கள் தொகுதியிலே நடக்கக்கூடிய முக்கிய காரியங்களில், ஒரு ஆஸ்பத்திரி ஆரம்பிப்பது, ஒரு புதிய பள்ளிக்கூடத்தை துவக்குவது, ஒரு பாலம் கட்டுவது போன்ற ஒரு நிகழ்ச்சி நடக்கும்போது கார்ப்பொரேஷன் அதிகாரிகளோ மற்றவர்களோ அங்கத்தினர்களுக்கு மதிப்புக் கொடுப்பது கிடையாது. இப்படி இருந்தால் நாங்கள் எப்படி

[Srimathi T. N. Anandanayaki] [14th November 1961

பொதுமக்களின் பிரதிநிதிகளாக வேலை செய்ய முடியுமென்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். குறிப்பாக, என்னுடைய தொகுதியிலே பள்ளிக்கூடத்தை ஆரம்பித்தார்கள்; ஆஸ்பத்திரியைக் கட்டினார்கள். ஆனால் அந்த அந்தத் தொகுதியிலுள்ள எம்.எல்.ஏ.வுக்கு அழைப்பு அனுப்பப்பட்டதா, அல்லது தர வேண்டிய இடத்தைக் கொடுத்தார்களா என்றால் இல்லை. அதிலே பங்குகொள்ளும்படியான வாய்ப்பைக் கொடுக்காமல், எப்படி நாங்கள் 75,000 மக்களின் பிரதிநிதிகளாக நகரத்தில் சட்டசபை உறுப்பினர்களாக எங்கள் பணியை உணர்ந்து வேலை செய்ய முடியுமென்று கேட்க ஆசைப்படுகிறேன். கார்ப்பொரேஷன் தொகுதியிலே நடக்கின்ற வேலைகளுக்கெல்லாம் அவர்கள் அரசாங்கத்திடம் கடன் வாங்காமலா இருக்கிறார்கள். அரசாங்கத்தின் உதவியோ, கடனோ பெற்றுத்தானே வேலைகள் நடத்தப்படுகின்றன. அப்படி அரசாங்கத்தின் உதவி பெற்று, பள்ளிக்கூடமோ, ஆஸ்பத்திரியோ, பாலமோ கட்டப்படும்போது, அதன் திறப்பு விழாக்களிலே மட்டும் ஏன் அந்தந்தத் தொகுதி எம்.எல்.ஏக்கள் பங்கு கொள்வதற்கு வாய்ப்புக் கொடுக்கப்படுவதில்லை. இப்படி நடந்துகொண்டு போனால், மக்கள் ஆட்சிக்கு இந்த முறை நல்லதா என்பதை அரசாங்கத்தின் கவனத்திற்கு கொண்டுவர விரும்புகிறேன். என் தொகுதியிலே நடந்த ஒன்றை குறிப்பிட விரும்புகிறேன். எம்.எல்.ஏ.-க்கு ஸீட் (seat) கொடுக்கலாமா, வேண்டாமா என்பதிலே மேயருக்கும், கமிஷனருக்கும் வாதம் நடக்கக்கூடிய முறையிலேதான் இன்றைக்கு நிலைமை இருந்து வருகிறது. இப்படி அனுமதி தரலாமா, வேண்டாமா என்று நினைப்பது மக்கள் ஆட்சிக்கு ஏற்ற நிலைமை ஆகுமா? ஆகவே, இதை இங்கு எதற்காகச் சொல்கிறேன் என்று சொன்னால், மக்களின் பிரதிநிதிகளாக விளங்கக்கூடிய அந்தந்தத் தொகுதி எம்.எல்.ஏ.க்களுக்கு இப்படிப்பட்ட விழாக்கள் நடக்கும் போது, அவர்களுக்குரிய இடம் கொடுக்க வேண்டுமென்பதை அறிய வேண்டுமென்பதற்காகவே இதை இந்த நேரத்திலே எடுத்துக் காட்டுகிறேன். இப்போது மாபெரும் திருத்தங்களை எல்லாம் செய்யும் நாம், இந்த நேரத்திலே இதையும் மாறுதல் செய்ய வேண்டுமென்பதற்காகவே இச்சமயத்தில் குறிப்பிட விரும்புகிறேன். அப்போதுதான் மக்களின் பிரதிநிதிகளாக விளங்கக் கூடியவர்கள் நாட்டிலே என்ன நடைபெறுகின்றது என்பதை அறிந்துகொள்ள முடியும். இப்போது நாம் புதிதாக சர்க்கிள் கமிட்டி, சென்ட்ரல் கமிட்டி, கான்ட்ராக்ட் கமிட்டி என்று எல்லாம் பல கமிட்டிகள் அமைக்க இருக்கிறோம். இதை நான் வரவேற்கின்றேன். அதேபோல் நகரசபையிலே வேலை செய்யக்கூடிய அதிகாரிகளை யெல்லாம், ஸ்டேட் கவர்ன்மென்ட் சர்விசோடு இணைக்க வேண்டுமென்று சொல்லி இருக்கிறார்கள். அப்படி நகர சபைக்கும், அரசாங்கத்திற்கும் தொடர்பு ஏற்படுத்திக்கொள்ள வேண்டுமென்று நினைக்கும்போது, சென்னை நகரத்து எம்.எல்.எக்களுக்கும், அங்கு நடைபெறுகின்ற நிகழ்ச்சிகளுக்கு மட்டும் ஏன் தொடர்பு இருக்கக்கூடாது? ஆகவே, இந்த இலாகாவின் அமைச்சர் அவர்கள் நகரசபை அதிகாரிகளுக்கும் நகரத்தின் பிரதிநிதிகளுக்

கும் அவரவர்களுடைய தொகுதிகளிலே நடக்கக்கூடிய இப்பேர்ப் பட்ட டெவலப்மெண்ட் ஆக்டிவிடிகளுக்கு அழைப்புக் கொடுக்கும் படி கட்டளை பிறப்பிக்க ஒரு சுற்றறிக்கையின்மூலம் அனுப்பினால் அது மக்கள் ஆட்சியை மதிப்பதாகும் என்பதை இந்த நேரத்திலே சொல்லிக்கொண்டு, இந்தத் திருத்தத்தை செய்யவேண்டுமென்றும் கேட்டுக்கொண்டு, இந்த மசோதாவை வரவேற்கிறேன். இதிலே எவ்வளவு நன்மைகள், தீமைகள் ஏற்படும் என்பதை இதை அமுல் நடத்திய பிறகுதான் தெரிந்துகொள்ள முடியும், இப்போது சொல்வது அவ்வளவு சுலபமல்ல என்று சொல்லிக்கொண்டு இத் துடன் என்னுடைய வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

SRI S. PAKKIRISAMI PILLAI : தலைவர் அவர்களே, இந்த நகரசபை மசோதாவை நாம் சட்டமாக்கப் போகிறோம். இதைச் சட்டமாக்குவதற்கு முன்னாலே, பல பிரச்னைகள் நம் முன்னால் நிற்கிறது. கார்ப்பரேஷன் மேயருக்கு உண்டான அதிகாரம் அதாவது இதர நாடுகளிலே இருக்கிற மாதிரியான அதிகாரம் நாம் ஏன் இன்னும் கொடுக்க முடியவில்லை. கமிஷனருக்கு உண்டான முழு அதிகாரம் இப்போது இருக்கிறதா? இதர கார்ப்பரேஷன் களிலே இருக்கிறபடி கமிஷனருக்கு அதிகாரம் இருக்கிறதா? இப்போது கமிஷனருடைய அதிகாரம் எல்லாம், அரசாங்கத்தாரை அடிக்கடி ஆலோசித்து, அவர்களுடைய ஆலோசனையின் பேரிலே நடக்கும்படியான நிலைமையில்தான் இருந்துக்கொண்டிருக்கிறது இந்த முறை மாறி, மேயருக்கு உண்டான அதிகப்படியான கவுரவமும், அவருக்குண்டான அதிகாரமும் நம்முடைய நாட்டி லேயும், சென்னை நகரத்திலே உள்ள நகராட்சி மன்றத்திற்கும் ஏற்பட வேண்டுமென்பதுதான் நம்முடைய குறிக்கோளாக இருக்க வேண்டும். ஆனால் இப்போது நாம் என்ன பார்க்கிறோம்? நகரத்திலே வரும்படியான வருமானத்தையெல்லாம், அரசாங்கம் எடுத்துக்கொண்டு விடுகிறார்கள். அதனாலே நகராட்சி மன்றம் தாம் செய்யவேண்டிய வேலைகளை யெல்லாம் பணம் இல்லாத காரணத்தினாலே, இப்போது அரசாங்கத்தைக் கடன் கேட்டோ அல்லது உதவி கேட்டோ அவர்களுடைய தேவையை பூர்த்தி செய்துகொள்ள வேண்டிய நிலைமையில்தான் இருக்கிறது. அரசாங்கத்தினுடைய தொடர்பு இருக்க வேண்டாமென்று நான் சொல்லவில்லை. எவ்வளவுக் கெவ்வளவு அதிகாரங்கள் கார்ப்பரேஷ னுக்கு இருக்க வேண்டுமோ, அந்த அளவுக்கு அதிகாரம் இங்கே இருக்கிறதா, என்று பார்க்க வேண்டும். மேல் நாடுகளிலே உள்ள இதர கார்ப்பரேஷன்களுக்கு இருக்கும்படியான அதிகாரம், அதிலே உள்ள சிப்பந்திகளுக்கு உள்ள அதிகாரம், அதிலே உள்ள மேயருக் குள்ள அதிகாரம் எல்லாம், இங்கிருக்கக்கூடிய சென்னை நகராட்சி மன்றத்திற்கு இருக்கிறதா என்று பார்த்து, இருக்கும்படி நாம் செய்ய வேண்டும். 1919-லே சிடி முனிசிபல் ஆக்ட்டை உண்டாக் கினோம். பதினேழு வருஷம் கழிந்த பிறகு, 1936-லே அதைத் திருத்தி அமைத்தார்கள். அதன் பிறகு 25 வருஷம் கழித்து, இப்போது 1961-லே திருத்தி அமைத்திருக்கிறோம். இப்படி 25 வருஷம் கழித்து ஒரு திருத்தம் ஏற்படுகிறது என்று சொன்னால்,

[Sri S. Pakkirisami Pillai] [14th November 1961

கூடிய சீக்கிரத்திலே கொடுக்க வேண்டிய முழு அதிகாரத்தையும் கொடுக்கக்கூடிய முறையிலே அமைக்க வேண்டும். அதேபோல் மேயருக்கு உண்டான அதிகாரத்தைக் கொடுத்து மேயரைத் தேர்ந்தெடுக்கும் முறையையும், இப்போது ஜாதிவாரியாக கான்ஸ்டிட்யூஷனுக்கு விரோதமாக இருந்தாலும், பழக்க வழக்கத்திலே வந்து விட்டதால், இதை மாற்றியமைக்க முடியாது என்று சொல்லாமல், பழக்கத்தை மாற்றி யார் திறமையுள்ளவர்களோ, யார் நன்றாக அட்மினிஸ்டர் செய்யக்கூடியவர்களோ அவர்களைத் தேர்ந்தெடுக்கும்படியான நிலைமையில் மாற்றியமைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். ஆகவே, இன்னொரு திருத்தத்தை சீக்கிரத்திலே கொண்டுவந்து இந்த மாதிரியான அதிகாரம் கொடுக்கக்கூடிய நிலைமையை ஏற்படுத்த வேண்டுமென்று கேட்டுக்கொண்டு, என்னுடைய வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

* SRI K. VINAYAKAM : Mr. Deputy Speaker, Sir, we are in the third reading stage. I do not know whether any useful purpose will be served by giving some suggestions for incorporation in the Bill at this stage. I have been feeling pertinently for some time in the past that in the city of Madras, the Councillors of the Corporation are in a position to do much better work from the point of view of the rate-payer than the Member of the Legislature elected from the City constituency. Of course, as Members of the Legislature, we are guiding the destinies of the State Government. We are given opportunities to take part in the discussions of various Bills that come up before the State Legislature. That apart, from the point of view of the citizens of the City, it is the City Councillor that comes into greater contact with the rate-payer than the Legislator. A Legislator may shape a Bill and he may be in a better position so far as legislation is concerned. But the ordinary rate-payer has got a soft corner for the City Councillor, because he is responsible for giving good drinking water, he is responsible for giving under-ground drainage facilities and he is in a position to reduce the property tax if ever it was raised beyond any reasonable limit. Considering all these things, the City Councillor is placed in a very enviable position. He is in a position to do something good to the electorate rather than the Legislator of the State. That is the reason why I have been harping now and then, in season and out of season, upon the necessity of associating Legislators with the affairs of the Municipal. Administration. I have been telling the Hon. Finance Minister who is solely responsible for the shaping of this amending Bill that in consonance with the District Development Councils functioning in the State and in which the Members of the Legislature have been co-opted, the Members of the Legislature may also be co-opted to the municipal councils also. At present, the Members of the Legislature take part in the discussions of the District Development Councils and their suggestions are being taken into consideration. I do not know whether they have any voting right or not. Whatever it is, their views are heard and respected and they are given sufficient opportunities to express their view-points and to put forward

14th November 1961] [Sri K. Vinayakam]

the wishes and demands of the people. More often, these are the powerful Legislators who shape things. I have been repeatedly requesting that in the same way, the Legislators who are elected representatives of the people should be co-opted as members of the municipal councils. I do not grumble even if they are refused voting rights.

It is not the vote that glamours me to be in the City Corporation. When compared to 100 members in the Corporation, 10 Legislators representing the City are not going to change the flow of events in the Corporation Administration and that is not the main consideration . These 10 Legislators will have their say on the floor of this (?) House on problems affecting the common folk but that is not keenly felt by the rate-payers in the City. My voter who has elected me to this House does not care whether I speak vociferously here or whether I use a proper language or whether I contribute to the discussions here. He does not worry much about it. If I give him facilities like water tap or neon(?) light or small things like that, he comes directly in touch with me and I also earn his goodwill for my success in the coming Elections.

THE HON. SRI C. SUBRAMANIAM : Then why does the hon. Member stand for the Assembly? He could stand for the Corporation of Madras.

SRI K. VINAYAKAM : I have taken note of what the Hon. Minister has stated for future guidance but that is a different matter. At the same time I must point out that in the Legislation concerning District Development Councils, we have allowed legislators representing the districts to be there and they could give their suggestions. Similarly I request the State Government to make such a provision in this Bill also. I know it is futile on my part to suggest it at this late hour. We are in the stage when the Bill is going to be passed into law.

The hon. Member Sri Pakkirisami Pillai, has thrown a very good suggestion regarding the election of Mayor. We are having a secular State and we do not elect people on the basis of caste or creed. In the case of the Scheduled Castes, we give some preferential treatment for ten years more. Nowhere in our country or in the world Mayors are elected on the basis of their caste or religion. But such an awful thing we are having in a metropolitan City like Madras, in the form of a convention. Mayors are elected every year on the basis of caste and creed—Mussalman, Non-Brahmin, Brahmin, Harijan, Indian Christian and like that. It is high time that the Corporation should be advised to give up this communal rotation basis so that they could set up a very good example to the rest of the country to follow. I hope the State Government will bear this in mind and if necessary instruct the Corporation authorities to give up this outmoded system of electing Mayors on the basis of caste. As I have stated in the

beginning, I do not know whether it would be possible to incorporate these suggestions in the Bill but still I feel that it would be in the interest of the Government if they ponder over them and do their best. With these words, I whole heartedly commend this Bill for the acceptance of this House.

* **SRI R. SRINIVASA IYER :** *கனம் உதவி சபாநாயகர் அவர்களே, 1919-ம் வருஷத்திலே ஏற்பட்ட இந்தச் சட்டம் 42 வருஷங்களுக்குப் பிறகு அனுபவத்தை ஒட்டி, ஏற்கனவே பல திருத்தங்கள் ஏற்பட்டிருந்தாலும், பெரும்பாலான 102 கிளாஸ்கள் போட்டு ஒரு திருத்த மசோதாவை இப்பொழுது சட்டமாக நிறைவேற்ற இருக்கிறோம். அதை மூன்றாவது தடவை படித்து நிறைவேற்றும் தருவாயில் இருக்கிற தருணத்திலே, ஏற்கனவே சில காலம் முனிசிபாலிடியில் இருந்து வசித்து வாழ்ந்து வந்தவன் என்ற முறையில் சில வார்த்தைகள் சொல்ல முன்வருகிறேன்.*

*எனக்கு முன்பு பேசிய நண்பர்கள், முனிசிபாலிடி, கவுன்சில் இவைகளைப்பற்றியும், மேயர் பற்றியும் மற்ற விஷயங்களைப் பற்றியும் இந்த மசோதாவை மூன்றாவது தடவை படிக்கும் தருவாயில் பேசினார்கள். எனக்கு ஒன்று ஞாபகத்திற்கு வருகிறது. சேது பாவா சத்திரத்திற்கு தஞ்சாவூரிலுள்ள டிரஸ்டி ஒரு மானேஜரை நியமித்தால் அவர் தஞ்சாவூரிலிருந்து சேதுபாவா வரும் பொழுது திரும்பிப் பார்த்துக்கொண்டே வருவார். ஏனென்றால் அந்த உத்தரவு மாறி வேறு உத்தரவு போட்டு இன்னொரு மானேஜர் பின்னாலேயே வரலாம். சேதுபாவா சத்திரம் வருவதற்குள்ளாக உத்தரவு மாறி வேறு மானேஜர் வந்து, இந்த முதல் மானேஜரின் பதவி காலம் ஆரம்பித்து முடிவடைந்துவிடும். அது போல வருஷத்திற்கு ஒரு முறை மேயர் போட்டால் ஒரு வருஷத்திற்குள்ளாக மேயர் எலக்ஷன் நடந்து, பாராட்டு விழாக்கள் முடிந்து, என்ன செய்யலாம் என்று ஆலோசிப்பதற்குள் 6 மாதம், 7 மாதம் ஆகிவிடுகிறது. அதற்குள் ஏதாவது ஒரு முக்கியமான காரியம் கார்ப்பரேஷனுக்கு செய்து முடித்துவிட்டுப் போகவேண்டுமென்றால் கூட முடிவதில்லை. அதற்குள் அடுத்த எலெக்ஷனுக்கு யாரைப்போடலாம் என்று அரசியல் யோசனை ஆரம்பித்து விடுகிறது. 1919-ம் வருஷத்தில் இருந்ததைப் போல இப்பொழுது கார்ப்பரேஷன் 4 பங்கு இருக்கிறது, 40 பங்கு வரும்படி இருக்கிறது. புதியதாக ஏராளமான ஏரியாக்கள் கார்ப்பரேஷனில் சேர்க்கப்பட்டிருக்கின்றன . கார்ப்பரேஷன் எல்லை சைதாப்பேட்டை வரையில், அந்தப் பக்கம் கோடம்பாக்கத்திற்கு ஒரு மைல்வரையில் போயிருக்கிறது. வீடுகள் ஏராளமாக கட்டப்பட்டிருக்கின்றன. 1919-ம் ஆண்டில் இருந்ததைவிட இப்பொழுது 'டோடல் பாபுலேஷன்' இரண்டு மடங்கு இருக்கும். இங்கு வாழக்கூடிய மக்களுக்கு சுகாதாரம் நல்ல முறையில் இருக்கிறதா, ரோடு வசதி நல்ல முறையில் இருக்கிறதா, ஆஸ்பத்திரிகள் இருக்கின்றனவா என்று எந்த வகையில் பார்த்தாலும், 4 பங்கு அந்த வசதிகள் பெருகியிருக்கிறதா என்று பார்த்தால், இல்லை. எந்த வகையிலே செய்வது என்று ஒரு திட்டம் போட்டு செய்வதாயிருந்தாலும், 5 வருஷ காலத்திற்காவது மேயர்*

14th November 1961] [Sri R. Srinivasa Iyer]

பதவிகாலம் நீடிக்கவேண்டும். பஞ்சாயத்து போர்டு தலைவர் பதவி காலம் 5 வருஷங்களாக இருக்கும்பொழுது, சென்னை மேயர் பதவி காலம் 5 வருஷங்களுக்கு இல்லாவிட்டாலும், மூன்று வருஷங்களாவது இருந்தால்தான் எந்தவிதமான காரியத்தையும் நடத்த முடியும். ஜாதிப் பிரச்னையைப் பற்றி நான் பேச விரும்பவில்லை. மெஜாரிடி எத்தனை பேர்கள் கவுன்சிலர்கள் இருக்கிறார்களோ அவர்கள் அபிப்பிராயப்படி மேயர் இருக்கலாம். ஒரு பீரியட், இரண்டு பீரியட் இருக்கலாம். திட்டம் போட்டுச் செய்வதாயிருந்தால், 365 நாள் 365 நாழிகை மாதிரி போய்விடும் என்பதைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். திரு. விநாயகம் அவர்கள் சொன்னதுபோல மேயர் எலக்ஷனைப்பற்றிய கன்வென்ஷனை மாற்ற வேண்டும்.

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ரூ. 1½ கோடி ஒதுக்கி ரோடுகள் போட்டு வசதி பண்ணலாம் என்று இருக்கும்பொழுது, ரோடு பற்றி என்ன செய்வது என்று யோசனை பண்ணி முடிவதற்குள் ஒரு மேயர் ஒரு வருஷம் பதவியில் இருந்துவிட்டுப் போய் விடுவார். அது சரியல்ல. நான் யாருக்கும் சிபார்சு பண்ண வரவில்லை. நான் மதராஸ் முனிஸிபாலிடியின் பிரஜையும் அல்ல, **City beautiful** என்ற பெயர் மாறி, துர்நாற்றமடிக்கிற அழகில்லாத கெட்டுப்போன நகரம் என்று பெயர் வரவேண்டுமானால், இப்பொழுது இருக்கிற முறை நீடித்து நடப்பது சரி. இல்லையென்றால், அந்த முறை மாறவேண்டும்.

இவ்வளவு பிரயாசைப்பட்டு இரண்டு சபைகள் சேர்ந்து ஒரு கமிட்டி போட்டு பரிசீலனை பண்ணி 3, 4 வருஷங்களாக மெனக்கிட்டு செலக்ட் கமிட்டிக்கு போகவேண்டாத முறையிலே நல்ல முறையில் இந்த பில் தயாரிக்கப்பட்டிருப்பதற்காக லா டிபார்ட்மெண்டுக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறோம், பாராட்ட கடமைப்பட்டிருக்கிறோம். 102 செக்ஷன்களில் 10, 12 திருத்தங்கள்தான் வாதாடப்பட்டது, அதுவும் **formal amendments** நல்ல முறையில் சட்டம் திருத்தப்பட்டிருக்கிறது. 'பில்லும்' நல்ல முறையில் எழுதப்பட்டிருக்கிறது. அந்த முறையில் நிர்வாகம் சம்பந்தமாக இன்னும் சில சௌகரியங்கள் செய்வது அவசியமாக இருக்கிறது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட விவாதத்தில் பேசும் பொழுது மதராஸ் ஸிடி பற்றி பேசினேன். இன்னும் அதை வற்புறுத்திச் சொல்ல விரும்புகிறேன். எவ்வளவு கோடி ரூபாய் ரோடு வசதி செய்வதற்குக் கொடுத்தாலும், இப்பொழுது மதராஸ் ஸிடியில் போய்க்கொண்டிருக்கிற மாதிரி சீர்திருத்தம் பண்ணிக்கொண்டு போனால் பிரயோசனம் இல்லை. ரோடுகளில் அநேக பள்ளம், படுகுழி இருப்பதினால், 'ஆக்ஸிடெண்ட்ஸ்' ஏற்படுகின்றன. பெரிய பஸ் ரோடில் உட்கார்ந்து விடுகிறது, அடியோடு வீல் உட்கார்ந்துவிடுகிறது. ரோடுகளின் நிலைமை கெட்டிருந்தால் இம்மாதிரி கெடுதல்கள் ஏற்படாமல் இருக்கவே முடியாது. அதற்குத்தான் 'டிபார்ட்மெண்டல் வொர்க்' நடந்தாலொழிய, நிலைமை சீர்படாது. மவுண்டு ரோட்டைத் தவிர வேறு ஒரு ரோடு

[Sri R. Sriniavsa Iyer] [14th November 1961

மதராஸில் இருக்கிறதா என்று அதிகாரிகளுக்கோ, அல்லது கவுன்ஸிலர்களுக்கோ அல்லது பிரஜைகளுக்கோ தெரியவில்லை. என்ஜினியர்களுக்கும், வேலை செய்பவர்களுக்கும் கூட தெரிய வில்லை. இதைச் சொல்லித்தான் ஆகவேண்டியிருக்கிறது. தவறுதலைச் சொன்னால்தான், எந்த இடத்தில் தவறு இருக்கிறது என்று பார்த்து சீர்திருத்த முடியும். கொஞ்சகாலமாக நான் இந்த மெட்ரூஸ் ஸிடியை நாலு பக்கங்களிலும் பார்த்திருக்கிறேன். பார்க்க வேண்டுமென்றே சுற்றி யிருக்கிறேன். இன்றைக்கு
12-00 noon. கோடம்பாக்கம், சைதாப்பேட்டை, வெஸ்ட் மாம்பலம் முதலிய பகுதிகளில் பார்த்தால், வீட்டு வரி, முன்பு 10 ரூபாயாக இருந்தது இன்றைக்கு 110 ரூபாயாக இருக்கிறது. பிரஜைகளுக்கு எந்தவித மான அதிகச் சௌகரியமும் ஏற்பட்டு விடவில்லை. எஞ்ஜினியர்கள் ரோடுகள் போடுகிறார்கள் என்றால், யார் அதை மேற்பார்வை பார்த்து தணிக்கை செய்கிறார்கள்? பாதசாரிகள் போவதற்காக ஏற்பட்டிருக்கும் பாதையில் குண்டும் குழியும் இருந்து நடப்பதே அபாயமாக இருக்கிறது. ரோடுகளில், அடியில் கற்களும், அதன் மேலே தாரும், அதற்கும் மேலே சிமென்டும் போடுகிறார்கள். ஆனால் அதில் ஏற்படும் பள்ளமும் படுகுழியும், அதனால் ஏற்படும் ஆக்ஸிடெண்டுகளும் கொஞ்சநஞ்சமல்ல. இந்த அட்மினிஸ்ட்ரேஷனைப் பார்த்தால், இந்த ஸிடி முனிசிபாலிடியை அடியோடு எடுத்து விட்டு, ஒரு ஸ்பெஷல் ஆபீஸரைப் போட்டு வேலை செய்தால் கூட நலமாக இருக்கும் போல் தெரிகிறது. ஆனால், நான் ஏதோ ஜனநாயகத்திற்கு விரோதமாகப் பேசுகிறேன் என்று சொல்லுவார்கள். ஜனநாயகத்தையும் வைத்துக் கொண்டு, கோடிக்கணக்கான ஜனங்களிடம் வசூல் செய்யும் வீட்டு வரி, சாக்கடை வரி, கக்கூஸ் வரி, இன்னும் லேடிங் டாக்ஸ் இவைகளெல்லாம் சரியான முறையில் மக்களுக்குப் பயன் படும் முறையில் நிர்வாகம் செய்ய வேண்டும் என்று சொல்லிக் கொண்டு, இதை நல்ல முறையிலே ட்ராப்ட் பண்ணினவர்களுக்கு நன்றியையும் தெரிவித்துக் கொண்டு முடிக்கிறேன்.

SRI M. S. SELVARAJAN: துணைத் தலைவர் அவர்களே, இந்த சிடி முனிசிபல் திருத்த மசோதா முடிவாக சட்டமாகும் இந்தத் தருணத்தில், இந்தச் சட்டம் நிறைவேற்றப்படுகிறது என்ற வார்த்தையால், இந்த நகர முழுவதிலும், மூலை முடுக்குகளில் கூட இருக்கும் ஏழை எளியவர்களும், எல்லோரும் இந்த அரசாங்கத்தை வாழ்த்துவார்கள் என்பதில் ஐயமில்லை. புதிய வாழ்வு ஏற்படும் என்ற நம்பிக்கை வரும். இத்தகைய புதிய சீர்திருத்தப் பட்ட சட்டத்தின் மூலமாக, இன்றுள்ள பல குறைபாடுகளும் நிவர்த்திக்கப் படும் என்ற நம்பிக்கையும் ஏற்படுகிறது.

நிர்வாகத்திலுள்ள பல குறைகளையும் போக்க இன்னும், நிர் வாகத்தைப் பொறுத்த மட்டில் பலமாதிரிப்பட்ட திருத்தங்கள் தேவை என்று நண்பர்கள் எடுத்து சொன்னார்கள். அவைகளை யெல்லாம் ஜாக்கிரதையாகப் பரிசீலிக்க வேண்டும். அப்படிப் பரிசீலனை செய்வார்கள் என்று அறிய விரும்புகிறேன். இந்த சென்னை

14th November 1961] [Sri M. S. Selvarajan]

நகரத்தில் வாழ்பவர்களில் பாதிப்பேர் ஹோட்டல்களையே நம்பி வாழ்பவர்கள். வந்து போகக் கூடியவர்கள் ஆயிரம் ஆயிரம் பேர்கள் இருப்பார்கள். இத்தகைய தலைநகரம் பெருமைக்குரியதாக இருக்கவேண்டும் என்பதில் சந்தேகமில்லை. சென்னை நகரம் இது வரைக்கும் குறிப்பிட்ட கட்டடங்களாலும், ரஸ்தாக்களாலும் அழகுப் பெயருக்கு உரித்தானதாக இருந்தது. ஆனால், வளர்ந்து வந்துகொண்டிருக்கும் சென்னை இனிமேல்தான் எந்த அளவுக்கு புதிது புதிதாக தோன்றி வரக்கூடிய தெருக்களும், பேட்டைகளும், அவசர அவசரமாக ஜனங்கள் குடியேறிவரும் இடங்கள், இன்றைக்கு நரகம்போல் இருக்கும் குடிசைவாழ் மக்களின் வாழ்வு வாழ்பவர்களுக்கு நல்வாழ்வு கொடுக்கும் இடங்களாகப் போகும் நிலையைப் பார்க்கப் போகிறோம். இன்றைக்குக் குளங்களும் குட்டைகளும் மேடிடப் படுகின்றன. பள்ளப் பகுதிகள் குப்பை கூளங்களால் அவசர அவசரமாக புதிது படுத்தப் படுகின்றன. ஆனால், அந்தக் காரியத்தை பாழாக்குவது மழைகாலம்தான். அப்பொழுது இந்தத் தெருக்களிலும், ஊர்களிலும், பாதியளவு தண்ணீரில் மூழ்கியிருக்கின்றன. அதை ஒரு சிடி கார்ப்பொரேஷன் தனித்து இருந்து தானே கவனிக்க முடியும் என்று நான் நம்பவில்லை. அரசாங்கம் பல லட்சக்கணக்கான ரூபாய்களைச் செலவழித்து பெரிய ரஸ்தாக்களைப் போடுவதிலும், சரி செய்வதிலும், அரசாங்கமும் பங்குபெற்று, சிடி கார்ப்பரேஷன் நிர்வாகிகளோடு, அரசாங்க எஞ்ஜினியர்களும் சேர்ந்து இந்த விஷயங்களில் கவனம் செலுத்த முடியுமா என்று ஆராயவேண்டும். ரஸ்தாக்கள் அமைப்பது போன்ற காரியங்கள் இவர்களின் ஜாயிண்ட் பொருப்பாக இருக்க வேண்டும். அது மிகவும் அவசியம். இன்று பார்க்கக் கூடிய குறைகளை நீக்கி நல்லமுறையில் பணி செய்ய அது ஒன்றுதான் வழி என்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம்.

ஆயிரம் ஆயிரம் மக்கள் வந்து போகும் இந்த ராச்சியத் தலைநகரில், குக்கிராமங்களில், சாதாரண முனிசிபல் நகரத்தில்கூட இல்லாத குறைகள் இருக்கின்றன. இங்கே "புட் அடல்டரேஷன்" எல்லை மீறி யிருக்கிறது. சாதாரண முனிசிபாலிடி கவனிக்கும் அளவில் கூட இங்கே கவனிக்கப் படுவதில்லை; கேசுகளும் போடவில்லை, குற்றவாளிகளும் தண்டிக்கப் படுவதில் கவனம் செலுத்தப் படவில்லை யென்ற குற்றச் சாட்டுக்கு கார்ப்பொரேஷன் நிர்வாகம் இலக்காகி இருக்கிறது. நகர சுகாதாரத்தை, பல ஹெல்த் ஆபீசர்கள் சேர்ந்து பார்க்க வேண்டும். இன்றையதினம், உணவு கலப்படத்தைத் தடுக்க, அவசியமானால் தனிப்பட்ட அதிகாரிகளை நியமித்து ஜாக்கிரதையாகப் பார்த்து நல்ல நிலைமையை உண்டுபண்ண வேண்டும். ஒரு காபி அருந்துவதைக் கூட விஷம் அருந்துவதுபோல், குடிக்க வேண்டியிருக்கிறது. ஒவ்வொரு உணவுப் பண்டத்திலும் கலப்படம் இருக்கிறது. இவை யெல்லாவற்றையும் சுகாதார ஆபீசர்கள் கவனித்து மக்களுக்குப் புது வாழ்வு அளிக்க வழிவகை செய்ய வேண்டும். இதற்கென்று

தனித்தனியாக அதிகாரிகள் நியமித்தாலும் கவனம் செலுத்த முடியுமா என்று பார்க்க வேண்டும், என்பது எனது பணிவான வேண்டுகோள்.

இன்றைக்கு இந்த மசோதா சட்டமாகும் வேளையில், இந்த ராஜ்யத்தில் இருக்கும் 3 கோடி மக்களுக்கும், நகரில் இருக்கும் பல லட்சக்கணக்கான மக்களுக்கும் ஒரு புது உணர்ச்சி ஏற்பட்டிருக்கிறது. உண்மையாகவே இந்தச் சட்டத்தினால் நல்ல பலன் கிடைக்கும், கார்ப்பொரேஷன் நிர்வாகம் திருந்தும் என்ற நம்பிக்கை இருக்கிறது. ஆகவே, இந்த மசோதா நிறைவேறுவதை நான் பெரிதும் ஆதரிக்கிறேன்.

* **SRI K. ANBAZHAGAN :** சட்ட மன்றத் துணைத் தலைவர் அவர்களே, சென்னை நகராட்சி நிர்வாக திருத்தச் சட்டம் இங்கே நிறைவேற்றப்படும் நேரத்தில் சில கருத்துக்களைச் சொல்ல விரும்புகிறேன்; அவை இந்தச் சட்டத்திலே இடம் பெறும் என்ற நம்பிக்கையோடு அல்ல, பல்வேறு கருத்துக்களையும் சொல்லுவதால், இந்தச் சட்டத்தை நடைமுறையில் கொண்டுவந்து நிர்வகிப்பதில் இதை கவனிக்கப்படும் என்று எதிர்பார்க்கின்ற காரணத்தினால் ஏறத்தாழ, இரண்டு மூன்று ஆண்டுகளாகவே இந்த மசோதா பல்வேறு கட்டத்தில் பரிசீலனை செய்யப்பட்டு நிறைவேறுகிறது என்றாலும், இது சட்ட மன்றத்தின் முழுப் பரிசீலனை பெற்று விட்டது என்று இன்றையதினம் குறிப்பு எழுதிக்கொள்ள முடியும் என்றாலும், மனசாட்சிக்குத் தோன்றும் வகையில், இது முழுப் பரிசீலனை பெறமுடியவில்லை என்றுதான் கருதுகிறேன். ஏன் முழு பரிசீலனை பெறவில்லை என்று கருதுகிறேன் என்றால், அரசாங்கச் சார்பில் கூட இன்றைக்குத் திடீரென்று பல திருத்தங்கள் தரப்பட்டு, அவைகளிலே அதிகக் கருத்து வேறுபாடு இல்லை, உடன்பட்ட கருத்துக்கள்தான் உள்ளன என்று சொன்னாலும், அவைகளைத் தெளிவாக ஆராய்வதற்கு வாய்ப்பு இல்லாமல் போய் விட்டது. வார்த்தை திருத்தங்கள் ஒரு புறம் இருக்க, நிர்வாக முறையில் செய்துள்ள முக்கியமான திருத்தங்கள் போதுமா அல்லது இன்னும் அதிகத் திருத்தங்கள் மேற்கொள்ள வேண்டுமா என்று ஆராயவேண்டும். அப்படி ஆராய்கிற வகையில், ஆலோசனைகள் சொல்வதற்கு வாய்ப்பு அளிக்கவில்லை என்று கருதுகிறேன்.

மற்றொன்று, சென்னை நகரில் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்ட மன்ற உறுப்பினர்களுக்கு நகராட்சி நிர்வாகப் பொறுப்பில் இடம் அளிக்க வேண்டும், வாக்கு அளிக்கும் உரிமையோடு இடம் இல்லாவிட்டாலும், வோட்டு செய்ய உரிமை இல்லை என்று சொன்னாலும், ஆலோசனை சொல்லக்கூடிய இயல்பான வாய்ப்பாவது இருக்க வேண்டும். அதற்கு, சென்னை நகராட்சி மன்ற உறுப்பினர்கள் எண்ணிக்கையோடு, சட்ட மன்ற உறுப்பினர்களையும் சேர்த்து குழு அமைப்பது இயற்கை. இதை ஒரு கட்சியைச் சேர்ந்த உறுப்பினர்கள் மட்டும் எடுத்துச் சொல்லவில்லை; எல்லாக் கட்சியினரும் எடுத்துச்சொல்லியிருக்கிறார்கள். கனம் நிதி அமைச்சர்

14th November 1961] [Sri K. Anbazhagan]

சொல்லலாம், அடுத்த தடவை இருக்கப்போகிறவர்கள் அதை கவனிக்கட்டும் என்று எப்படி எண்ணிப் பார்த்தாலும், சென்னை நகரத்தைப் பொறுத்த வரையில், சட்டமன்ற உறுப்பினர்கள் மாநகராட்சி மன்றத்துடன் தொடர்பு பெற்றுப் பணி செய்ய வாய்ப்பு வேண்டும். இதனால் நகராட்சி நிர்வாகம் எந்த விதத்திலும் பாதிக்கப்படாமல் தடுத்துக்கொள்ள முடியும். இவர்களுக்கு ஆலோசனை கூறவும் வாய்ப்பு அளிக்க முடியும். ஏற்கனவே ஒரு கருத்து இருந்தது, இப்படிப்பட்ட வட்டக் குழுக்களில் ஒரு பெண்மணியாவது இடம் பெற வாய்ப்பு இருக்கவேண்டும் என்று; எப்படி தாழ்த்தப்பட்ட மக்கள் இயல்பாக தேர்ந்தெடுக்கப்படாவிட்டாலும், அவர்களில் ஒருவர் பிரதிநிதியாக இருக்கவேண்டும் என்ற கருத்து இருக்கிறதோ, அதைப்போலவேதான் எந்தப் பகுதிகளிலும் போட்டியிட்டு வரா விட்டாலும் பெண்களில் ஒருவர் மாநகராட்சி மன்ற வட்டக் குழுவில் இடம் பெறுவது எந்தவிதத்திலும் பயனுள்ளதாக இருக்குமே தவிர, இடையூறு ஆகாது. என்ன காரணத்திற்காகவோ ஆளும் கட்சித் தலைவர் அவர்கள் அவைகளை ஏற்றுக் கொள்ளவில்லை.

உண்மையாகவே இன்றையதினம், சென்னை நகராட்சி மன்ற உறுப்பினர்கள் மீது, நகராட்சி மன்ற நிர்வாகத்தைப்பற்றி அதிகமாக, ஆத்திரப் படுகிறார்கள் ஆளுங்கட்சி அங்கத்தினர்கள். என்ன காரணத்தினாலோ, எந்தக் கட்சி ஆட்சியில் இருக்கிறது என்ற உணர்ச்சியால் அவர்கள் இப்படிக் குறைப்படுகிறார்கள் என்று எண்ணுகிறேன். எல்லாக் குறைகளையும்விட நிதி போதுமான அளவு இல்லாததால்தான் எந்த அளவு மக்களுக்கு வசதிகளைச் செய்து கொடுக்க வேண்டுமோ அந்த அளவு வசதிகள் செய்து தர முடியவில்லை யென்பதை புள்ளிவிவரங்களைப் பார்த்தால் எவரும் ஏற்றுக் கொள்ளுவார்கள். அந்த வகையிலேதான் இன்று காலையிலே பேசிய நண்பர் திரு சி. ஆர். ராமசாமி அவர்கள்கூட என்ன இருந்தாலும் மாற்றுந்தாய் என்று சொல்லுகிற முறையிலேதான் அரசாங்கத்தாலே மாநகராட்சி மன்றம் நடத்தப்பட்டு வருகிறது என்ற கருத்தைத் தெரிவித்தார். மாநகராட்சியினர் எடுத்துச் சொன்ன பல திட்டங்களை ஏற்றுக்கொள்ளாத காரணத்தால்தான் இந்தக் குறைகள் ஏற்பட்டிருக்கின்றன. பெரிய திட்டங்களை தானே நிறைவேற்றுவதற்கான வசதி அந்த நிர்வாகத்திற்கு இல்லை என்பதைத் தெரிவித்தார். எந்தக் குறையைப்பற்றி பேசுவதாயிருந்தாலும், அந்தக் குறையை போக்கும் முழு பொறுப்பும் மாநகராட்சி மன்றத்திற்குத்தான் இருக்கிறது என்று தீர்மானிக்க முடியுமா? அப்படித் தீர்மானிக்க வேண்டுமானால் சென்னை அரசாங்க நிர்வாகத்திலே இருக்கிற தலைசிறந்த இரண்டு அல்லது மூன்று அதிகாரிகளை இவைப்பற்றி ஆராய்வதற்கென்று ஒரு குழுவாக நியமித்து ஆராய்ந்துப் பார்த்து தீர்மானிக்கலாம்.

மற்றொன்று, மாநகராட்சி மன்ற நிர்வாகத்திலே பெரும் பொறுப்புள்ளவர் ஆணையாளர்தான். அந்த நிர்வாகத் துறையில் அதிக அக்கரை எடுத்துக்கொள்ளக்கூடியவரோ, அதைப்பற்றி 24

மணி நேரம் சிந்திக்கக் கூடிய வாய்ப்பு உள்ளவர்களோ வேறு யாரும் இல்லை. எனவே அவருக்கு சற்று அதிக அதிகாரம் இருப்பதில் தவறு இல்லை. ஆனால் அந்த அதிகாரங்கள் இருந்தும் கூட, நகராண்மைக் கழகத்தின் பல நிர்வாகக் குழுக்களுடன் நன்றாகச் செயல்பட வேண்டும் என்றால் ஸ்டாண்டிங் கமிட்டிகள் இருந்தது போல, ஏற்படவிருக்கும் மத்திய கணக்குக்குழு ஆகியவற்றோடும் வட்டக்குழுக்களோடும் மாநகராட்சி மன்ற ஆணையாளர் எந்த அளவுக்கு ஒத்துழைக்கக் கூடிய நல்வாய்ப்பு ஏற்படுகிறதோ, அதைப் பொறுத்துத்தான் நிர்வாகம் சிறக்க முடியும். மாநகராட்சி ஆணையாளர் சிலர் நல்ல முறையிலே ஒத்துழைக்கப் பழகியிருக்கிறார்கள். ஆனால் அப்பதவிக்கு வரக்கூடிய எவரும் அந்த முறையிலே நடந்துக் கொள்ள வேண்டும். இதற்கு முன்னராக உள்ள நிர்வாக முறையில் ஸ்டாண்டிங் கமிட்டிகளுக்கு நிலைக்குழுக்களுக்கு செல்வாக்கு மிக அதிகமாயிருந்தது. ஒரு குழுவுக்கு மிகுந்த அதிகாரம் இருந்த காரணத்தினால் சில குறைபாடுகள் ஏற்படுகிற பொழுது அந்தக் குறைபாடுகளை நிறைவு செய்வதற்கு அந்த ஸ்டாண்டிங் கமிட்டி தன்னுடைய அதிகாரத்தைப் பயன்படுத்தி தன் கருத்தை வற்புறுத்த முடிந்தது. இப்பொழுது ஏற்பட்டிருக்கிற சீர்திருத்தத்தின் காரணமாக அந்தத் தொல்லைக்கு இடமிராது என்று நம்புகிறேன். மத்திய குழுவாக இருந்தாலும் அதன் அதிகாரம் வரையறை செய்யப்பட்டிருக்கிறது. மத்திய குழுவினுடைய தலைவராக வருபவரும், சென்னை மாநகராட்சி மேயராக வருபவரும், ஆணையாளராக உள்ளவரும், இந்த மூன்று பேர்களுக்கும் இடையிலே நல்ல ஒத்துழைப்பு இருக்குமேயானால், அந்த மூன்று பேரும் ஒருவருக்கொருவர் கலந்து பேசி கடமைகளை நிறைவேற்றுவதானால் மாநகராட்சி மன்றத்திலே எந்தத் தனிப்பட்ட குழுவும் அதிக செல்வாக்குப் பெற்று பொதுவான கடமைகளைத் தடுத்து நிறுத்த முடியாது என்ற நல்ல நிலைமை தோன்றியிருப்பதை நான் உளமார வரவேற்கின்றேன். மாநகராட்சி மேயராக இருப்பவர் ஒரு குழுவுக்கு—பணியாளர் குழுவுக்கு—ஏன் தலைவராக இருக்கவேண்டுமென்று நான் கேட்டது மேயர் தகுதியைக் குறைப்பதற்காக அல்ல. மேயர் என்று சொன்னால் நகரத்தின் தலைவர் என்ற முறையில், பொது மக்களுக்கான பொதுவான கடமைகளை அதிகாரிகளுக்கு அறிவித்து நிறைவேற்றும்படி தூண்டுவதற்கும் மாநகரின் தந்தையாக, பிரதிநிதியாகப் பல பொதுக்கடமைகளை ஏற்கிறார். ஆனால் ஒவ்வொன்றையும் கவனித்து சீர்தூக்கிப்பார்த்து, ஒவ்வொன்றையும் பரிசீலனை செய்யவேண்டிய கட்டத்திலே அமையக்கூடியவர் இப்பொழுது மத்திய குழுவின் தலைவராக வருகிறவர். அவர் ஏறத்தாழ மூன்றாண்டு காலமாக தொடர்ந்து தலைவராக இருக்கக்கூடும் என்ற காரணத்தினாலே, நிர்வாகத்துடன் அதிகத் தொடர்பு கொண்டு தொடர்ந்து பணி ஆற்றுவதற்கான வழி வகையினை மத்தியக்குழு தலைவர் கவனிக்க முடியும். ஏறத்தாழ எந்த அளவுக்கு முனிசிபல் சேர்மன் செயலாற்றுகிறாரோ அந்த அளவு செயலாற்றும் வாய்ப்பு மத்தியக்குழு தலைவருக்குக் கிடைக்கும். மேயர் நகரத்தின்

14th November 1961] [Sri K. Anbazhagan]

தந்தை, நகரத்தின் பெருமைக்கு அடையாளமாக விளங்குபவர், நடைபெறும் முக்கியமான பொதுக்காரியங்களை செயல்படுத்தி தூண்டுபவராக அமைய முடியும். கமிஷனர் இந்தப் பொறுப்புக்களை நிறைவேற்றுகிறவராக இருக்க முடியும். எனவே இப்படிப்பட்ட சீர்திருத்தம் வருகிறபொழுது, இந்தமாதிரி குறைகள் இருக்குமேயானால், அந்தக் குறைகள் களையப்படும் என்ற நம்பிக்கை எனக்கிருக்கிறது. ஆனால் ஒத்துழைப்பு மிக மிக முக்கியம். அந்த ஒத்துழைப்பு வளர வேண்டுமானால் தமிழ்நாடு அரசாங்கம் மாநகராட்சி மன்றத்திற்கு எவ்வளவு அதிகமாக உதவி செய்ய முன்வருகிறதோ எந்த அளவிற்கு புதிய திட்டங்கள்--அதிகாரிகள் மூலமாக பரிசீலிக்கப்பட்டு தரப்படுகிற பணிகள்--நிறைவேற்றப்படுவதற்கு ஒத்துழைக்கிறார்களோ அந்த அளவுக்கு நிர்வாகம் குறைவற்றதாகும். மேலெழுந்தவாரியாக இந்தச் சீர்திருத்தங்கள் நடைபெற்றால் மட்டும் போதாது. அங்கே நிர்வாகத்தில் பணியாற்றுகிறவர்கள் பல்வேறு குறையுடைய நிலையில் இருக்கிறார்கள். அந்த நிர்வாக அமைப்பு முழுவதும் சீர்திருத்தப்பட்டு ஆகவேண்டும். அதைத்தான் நான் **"Re-organisation of the Corporation Machinery"** என்று சொல்ல விரும்புகிறேன். நிச்சயமாக அது சீர்திருத்தப்பட்டு ஆக வேண்டும். பத்து வட்டக் குழுக்கள் அமைக்கப்பட்டு ஆங்காங்கே ஆலோசனை நடைபெறும் கட்டத்தில் அந்த ஆலோசனைகளை நிறைவேறுவதற்கு தனித்தனி செயலாக அமைப்புகள் பணியாற்றுகிற அமைப்புகள், ஏற்பட வேண்டும். அவைகளுக்குக் கட்டிட வசதிகள் தேவைப்படும். கட்டிட வசதிகள் மட்டுமல்லாமல் ஆங்காங்கே தனி நிர்வாக நிலைமை ஏற்பட்டால் ஏறத்தாழ பத்து இடங்களில் கமிஷனருடைய நேரடி நடவடிக்கைகள்—நேரடி நடவடிக்கை என்று நான் சொல்வது நேரடி அரசியல் நடவடிக்கை அல்ல நேரடியாக நிர்வாகப் பொறுப்பை நிறைவேற்றுவதைக் குறிப்பிடுகிறேன்—தக்க பயனளிக்க முடியும். அப்படிப்பட்ட நேரடி மேற்பார்வையால் முழுப்பயன் ஏற்படவேண்டுமானால் ஒவ்வொரு வட்டக் குழுவுக்கும் ஒரு அதிகாரி, ஏறக்குறைய அஸிஸ்டண்ட் கமிஷனர் என்று குறிப்பிடப்படுகிற அந்தப் பெயரோடு அல்லது அதற்கு அடுத்த நிலையில் உள்ள அதிகாரியின் பெயரோடு, நிர்வாக உரிமையோடு இருக்கவேண்டும். அப்படி இருக்கவேண்டுமானால் இந்தச் சட்டத்திலே திருத்தங்கள் செய்தாகவேண்டும்.

கமிஷனருக்குத் துணை செய்வதற்கு வேண்டுமானால் ஒரு டெபுடி கமிஷனரையோ, அல்லது வட சென்னை, தென் சென்னை என்று பிரிப்பதாக இருந்தால் இரண்டு டெபுடி கமிஷனர்களோ துணை செய்வதற்கு இருக்கலாம். ஆனால், நிர்வாக முறையிலே ஏறத்தாழ அஸிஸ்டெண்ட் கமிஷனர் என்ற நிலையில் உள்ளவர்கள் பெரும்பாலும் ஒரு வட்டத்திற்கு ஒருவர்—வட்டம் என்றால் டிவிஷனை நான் சொல்லவில்லை—இப்பொழுது அமைக்கப்படுகிற பத்து வட்டங்களுக்கும் ஒவ்வொருவர் அமர்த்தப்படவேண்டுமென்று விரும்புகிறேன். தேர்தலுக்குப் பின்னர்தான் இது செயல்படுவது இயற்கை. அதற்கு முன்னாலே, இருக்கிற குழுக்களை கலைப்பதானால்

அதற்குரிய எல்லா முன்னேற்பாடுகளையும், என்னென்ன கடமைகளை அரசாங்கம் செய்யவேண்டுமோ அவற்றையெல்லாம் செய்துவிட்டுத்தான் மாற்றத்தை ஏற்படுத்த வேண்டும் மாற்றத்தை எப்பொழுது வேண்டுமானாலும் ஏற்படுத்தலாம் என்ற கருத்துக்குச் சட்டத்திலே இடமிருக்கிறது. மறுபடியும் ஒரு தேர்தல் எதிர்பார்க்கப்படும் கட்டத்தில், நாட்டிலே நடக்கப்போகும் பொதுத் தேர்தலைப் பற்றி நான் சொல்லவில்லை; மாநகராட்சி மன்றத் தேர்தலைப்பற்றியே சொல்லுகிறேன். அடுத்த நகரசபை தேர்தல் 1962-வது ஆண்டு ஏப்ரல் மாதத்திலே நடைபெற வேண்டியது. தள்ளிப் போடப்பட்டு 1962 நவம்பரிலே நடைபெற இருக்கிறது. ஏறத்தாழ இன்னும் ஓராண்டு காலம் இருக்கிறது. அந்தத் தேர்தலை ஒட்டியே இந்தத் திருத்தச் சட்டத்தை அமுல் படுத்துவதற்கு உரிய நடவடிக்கைகளை அரசாங்கமும், அரசாங்கத்தின் ஆலோசனை மீது மாநகராட்சி மன்றமும் எடுத்துக்கொள்வதே முறையாகும். சட்டம் திருந்திய முறையிலே வருகிறதென்று சொன்னாலும், அதைச் சிறந்த முறையிலே நிறைவேற்றும் பொறுப்பு அரசாங்கத்திற்கே. அதற்கான தக்க ஏற்பாடுகளைச் செய்வதற்கு அவர்கள் முன்வரவேண்டும் என்று சொல்லிக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

* THE HON. SRIMATHI **LOURDHAMMAL SIMON** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கனம் அங்கத்தினர்கள் மசோதாவைப் பற்றியும் அதிலுள்ள பல ஷரத்துக்களைப் பற்றியும் பேசும்போது, மசோதாவிற்கு அப்பாற்பட்ட பல ஆலோசனைகளையும் இங்கு கூறியிருக்கிறார்கள். இந்த மசோதாவை இங்கே நிறைவேற்ற ஒத்துழைப்பு தந்திருக்கும் இந்த சட்டம் அமுலாகும் போது சிக்கல் ஏற்படாமலிருக்கும்பொருட்டு அதற்கான பல ஆலோசனைகளைக் கூறியிருப்பதற்கும் கனம் அங்கத்தினர்களுக்கு எனது நன்றி.

இந்தச் சட்டத்தினால் ஏதாவது பாதகம் ஏற்பட்டுவிடுமோ என்று சில சந்தேகங்களையும் சிலர் தெரிவித்தார்கள். கனம் அங்கத்தினர் திருமதி. அனந்தநாயகி பேசும்போது, நகரசபையில் பொறுப்பு உள்ளவர்கள் சட்டசபை அங்கத்தினர்களுக்குத் தரவேண்டிய மரியாதையைத் தரவில்லை என்ற முறையில் பேசினார்கள். அவர் பேசியது இந்த மசோதாவுக்கு அவ்வளவு பொருத்தமானதாக இல்லை. ஒருசில நபர்கள் தவறாக நடந்திருக்கலாம். அவ்வாறு நடந்தாலும் அரசாங்கம் அவசியப்பட்ட நிலைமைகளில் அதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ளத் தவறாது என்று உறுதியாகக் கூறலாம்.

நகரத்தை அழகுபடுத்தவேண்டும், நகரத்தில் வசதிகளை இன்னும் அதிகமாக்கவேண்டும், குடிசைகளை ஒழுங்கான முறைகளில் அமைக்க வசதி செய்யவேண்டும் அதிலே அரசாங்கம் அதிக கவனத்தைச் செலுத்தி நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று பல கனம் அங்கத்தினர்களும் அபிப்பிராயம் தெரிவித்தார்கள். அதில்

பல சிக்கல்கள் இருக்கின்றன. நிதி நிலைமை குறைவாக இருப்பதால், எதிர்பார்க்கிற எல்லா வசதிகளையும் உடனடியாகச் செய்ய இயலாமல் போகின்றது. அரசாங்கம் எத்தனையோ சந்தர்ப்பங்களில் மான்யம் கொடுத்து உதவுவதன் காரணமாக அநேக வசதிகளைப் பெருக்கிக்கொள்ள முடிந்திருக்கிறது. சென்னைமா நகரத்தைப் பொறுத்த வரையில், ரோடுகளைப் பாதுகாப்பதற்கும் ரோடுகளைப் பழுது பார்ப்பதற்கும், இன்னும் என்ன என்ன வசதிகள் செய்து கொடுக்கவேண்டுமோ அவைகளைச் செய்வதற்கும் அரசாங்கமும் தவறாமல் உதவி செய்யும் என்பதை நான் உறுதியாகக் கூறுகின்றேன்.

மேயர் தேர்தலைப் பற்றியும், மேயருடைய பதவிக் காலத்தை நீடிக்க வேண்டும், அவ்வாறு நீடிப்பது நலம் என்றும் சிலர் கருத்து தெரிவித்தார்கள்.

திரு. விநாயகம் சட்டமன்ற அங்கத்தினர்களுக்கு நகரத்தில் அதிக பொறுப்பேற்று நடத்த முடியாத நிலையை விளக்கினார். சட்ட மன்ற உறுப்பினர்களுக்கும் நகர மன்ற உறுப்பினர்களுக்கும் தனித்தனியான பொறுப்புக்கள் இருக்கின்றன, நகர மன்ற உறுப்பினர்களுடைய பொறுப்பைச் சட்ட மன்ற உறுப்பினர்கள் எடுத்துக்கொள்ளுவது அவ்வளவு பொருத்தமானதல்ல. தண்ணீர்க் குழாய் அமைப்பது போன்ற காரியங்களில் சட்ட மன்ற உறுப்பினரைவிட நகர மன்ற உறுப்பினர்களுக்குத்தான் பொறுப்பு இருக்கிறது, சட்ட மன்ற உறுப்பினருக்கு ஆலோசனை கூற வாய்ப்பு இருக்கவேண்டும் என்று கூறினார்கள். தனிப்பட்ட பிரச்சினைகளை அகற்றி, பொதுப் பிரச்சினைகளில் சட்ட மன்ற உறுப்பினர் அந்தந்தத் தொகுதிகளில் கவனம் செலுத்துவது நலமாக இருக்கும் என்று நான் கருதுகிறேன்.

கனம் அங்கத்தினர் திரு. ஸ்ரீனிவாச அய்யர் அவர்கள் பேசும் போது, மேயருடைய பதவிக் காலம் குறைவாக இருப்பதால் ஆக்க வேலை நடைபெறாமல் போய்விடுகிறது என்று குறிப்பிட்டார்கள். மேயர் ஒரு வருஷம் பதவியில் இருப்பது என்பது வழக்கமாக இருந்துவருகிறது. அப்படி ஒரு வருஷம் பதவிக் காலமாக இருப்பதால் இந்தக் குறுகிய காலத்தில் ஆக்க வேலை நடைபெறாமல் போய்விடுகிறது என்று அவர் சொல்வது உசிதமில்லை. மேயர் பதவிக் காலத்தில், உடனடியாகக் கவனிக்க வேண்டிய முக்கிய காரியங்கள் பலவற்றை கவனிக்கின்றார். தொடர்ந்து செய்ய வேண்டிய வேலைகளை வேறு பொறுப்பு உள்ளவர்கள் நடத்திக் கொண்டுதான் இருக்கிறார்கள். மேயர் மாறிவிடுகிறபோது அந்த வேலை தடைப்பட்டு நிற்பதாக எனக்குத் தெரியவில்லை. மேயருடைய பதவிக் காலத்தை அதிகப்படுத்த வேண்டும் என்று இந்த மசோதாவைப் பரிசீலனைக்கு எடுத்துக்கொண்டபோது யாரும் அபிப்பிராயம் தெரியப்படுத்தவில்லை. மேலால் வருகிற சந்தர்ப்பங்களில் வேண்டுமானால் இதைக் கவனிக்கலாம்.

[Srimathi Lourdhammal Simon] [14th November 1961

அரசாங்கம் கொண்டுவந்த திருத்தங்களைப்பற்றி கனம் அங்கத்தினர் திரு. அன்பழகன் அவர்கள் பேசும்போது, அவை அவசரமாகக் கொண்டுவரப்பட்டதாகச் சொன்னார்கள். கனம் நிதி அமைச்சர் அவர்கள் கூறியதுபோல, அந்தத் திருத்தங்கள் கடினமான பிரச்னைகள் உள்ளவை அல்ல, பல புது அபிப்பிராயங்களை ஏற்றுக் கொள்ளவேண்டுமென்ற காரணத்தால்தான் அந்தத் திருத்தங்கள் கொண்டுவரப் பட்டிருக்கின்றன. அவை மிகவும் தேவையானவை, இந்த மசோதாவுக்குக் கொண்டுவரப்பட்ட திருத்தங்கள் காரணமாகவும், பொதுவாகவே இந்தச் சட்டத்தின் மூலமாகவும் நல்ல பலன் ஏற்படும் என்றுதான் கருதப்படுகின்றது. சில அங்கத்தினர்கள் ஏதோ தவறுகள் ஏற்பட்டுவிடும் என்று தெரிவித்தார்கள். இந்தப் பொறுப்பை ஏற்று நடத்தக் கூடியவர்கள் நகர சபை அங்கத்தினர்களும் அதிகாரிகளும் ஆவார்கள். அவர்கள் இந்தச் சட்டத்தின் காரணமாக, எந்த விதமான முட்டுக்கட்டைகளும் வசதிக் குறைவுகளும் இல்லாமல் சிறந்த முறையில் வாய்ப்பைப் பயன்படுத்தி செயலாற்றுவார்கள் என்ற நம்பிக்கையை நான் தெரிவித்துக்கொள்கிறேன். அந்த நம்பிக்கையின் பேரில்தான் இந்த மசோதா இன்று இங்கு கொண்டுவரப்பட்டிருக்கிறது. கனம் அங்கத்தினர்கள் தெரிவித்த ஆலோசனைகளுக்கு இன்னும் ஒரு முறை நான் நன்றி கூறிக் கொண்டு, இந்த சட்டம் நல்ல முறையில் அமுல் நடத்தப்படும் என்ற நம்பிக்கையையும் தெரிவித்து, இது நல்ல முறையில் செயல்பட கனம் அங்கத்தினர்கள் ஒத்துழைப்பு தரவேண்டுமென்றும் நான் கேட்டுக் கொள்கின்றேன்.

DEPUTY SPEAKER : The question is—

"That the Madras City Municipal Amendment Bill, 1961 (L.A. Bill No. 35 of 1961) as amended be passed."

12-2 p.m. The motion was put and carried and the Bill as amended was passed.

DEPUTY SPEAKER : The House will now adjourn and meet again at 8-30 a.m. tomorrow, the 15th November 1961.

The House then adjourned.